டிருக்கிறேனே? பல ஆண்டுகளாக இந்த மாளிகையின் வழக்கமாயிற்றே இது?''

''கவிகளின் பரம்பரை மேல் உங்களுக்கு ஏன் இத்தனை குரோதமோ?'' என்று இளங்குமரன் சிரித்துக்கொண்டே கேட்டான். அவனுடைய இந்தக் கேள்வியைச் செவியுற்று, ''இது எங்கோ கேட்ட குரல்போல் இருக்கிறதே? நீ யார் அப்பா? இப்படி என் முகத்துக்கு முன்னால் வந்து நின்று பேசு. யாரோ சந்நியாசி என்னைத் தேடி வந்திருப்பதாக அல்லவா காவலன் கூறினான்?'' என்றார் பெருநிதிச் செல்வர். சிறிது நேரம் பேசியதிலேயே அவர் குரல் கரகரத்துத் தளர்ந்திருந்தது. இளங்குமரன் தான் நின்ற இடத்திலிருந்தே அவருக்கு மறுமொழி கூறலானான்

''நீங்கள் எங்கோ கேட்ட குரல்தான் இது! நியாயத்தின் குரல் எந்தப் பிறவியிலாவது உங்கள் செவிகளில் விழுந்திருக்கும். இப்போது மறுபடி அதைக் கேட்கிறீர்கள். இப்போது உங்களிடம் பேசுவது என் குரல் அல்ல. இது நியாயத்தின் குரல். கவி அமுதசாகரருக்கும் அவருடைய காதலி மருதிக்கும், காலாந்தகருக்கும் நீங்கள் புரிந்த அநியாயங்களை எல்லாம் பார்த்த காலத்தில் கூடப் பொறுமையாயிருந்து விட்ட நியாய தேவதை இன்று உங்களைத் தேடி வந்து இப்போது என் குரலில் பேசுகிறது'' என்று அவன் கூறிய போது படுக்கையிலிருந்து துள்ளி எழுந்து திரும்பினார் அவர். அவருடைய கண்கள் பின்புறம் வேகமாகத் திரும்பிப்பார்த்தன. (தொடரும்)

# வ ட் ட மே மை ஜ

### மனம் குமுறுகிறது

ராஜாஜி அவர்களுக்கு,

சில தினங்களாக என் உள்ளத்தில் அலைமோதும் உணர்ச்சிகளின் எதிரொலியே இந்தக் கடிதம்.

பிப்ரவரி 26-ம் நாள் காலை வரை சுதந்திரக் கட்சியில் அநுதாபம் இன்றி இருந்தேன். ஆனால் அன்று காலை திருநெல்வேலித் தொகுதி தேர்தல் முடிவினைக் கேட்டதும் என் உள்ளம் திடுக்கிட்டது; நடுங்கியது. என்னை அறியாமலே அதனிடம் பாசம் வளர்ந்து வருகிறது.

திரு எஸ். இராமசாமிக் கோனார் அவருடைய நேர்மையையும், அறங்கோடாச் சான்றாண்மையையும், கருணை உள்ளத்தையும், பொதுநல உணர்வினையும் நான் நன்கு அறிவேன். எனவே தேர்தலுக்காகச் சில தினங்கள் 'லீவு' எடுத்து நெல்லைக்குச் சென்றேன். கோனார் சென்ற இடமெல்லாம் செல்வாக்கும் வரவேற்பும் இருப்பதை அறிந்து மகிழ்ந்தேன். கோனாரைத் தோற்கடிக்க அமைச்சர்களும், பல முதலாளிகளும், பெர்மிட் 'முதலை'களும் 'லைசென்ஸ்' திமிங்கிலங்களும், 'கோட்டா'ப் பிசாசுகளும் சதி செய்வதையும் உணர்ந்தேன்.

''நாமும் கொஞ்சம் வோட்டுக்கள் விலை கொடுத்து வாங்கினால் என்ன?'' என்று திரு கோனாரிடம் கேட்டோம். ஆனால் அவரோ, ''என் பணம் உழுது சம்பாதித்த பணம்; தேர்தல் சூதாட்டத்தில் பாமர மக்களின் பணப் பசியை அடகு வைத்து இச்சூதினை ஆட நான் விரும்பவில்லை'' என்று மறுத்து விட்டார். முடிவு தாங்கள் அறிந்ததே.

மக்களின் செல்வாக்கைப் பெற்று, தமக்கென வாழாத அந்த உள்ளம், தாங்கள் நெல்லையில் கண்டெடுத்த தங்கக் கட்டி, பொதுப் பணியும் அறப் பணியும் செய்து முதுமையுற்ற அந்த உள்ளம் — இப்போது என்ன பாடுபடுமோ, அறியோம்!

4-3-62 **ஓர் அன்பர்**

### காங்கிரஸ் எப்படி ஜெயித்தது?

ராஜாஜி அவர்களுக்கு,

நடந்த பொதுத் தேர்தலில் அநேக தொகுதிகளில் தோல்வியை அடைய வேண்டிய காங்கிரஸ் வெற்றி கண்டதற்கு வாக்காளர்களின் பட்டியலில் அவரவர்களின் பெயர்களுக்கான வோட்டுச் சீட்டில் எண்களைக் குறித்துக் கொண்டதே காரணம்.

உதாரணமாக, ஐ. ஏ. எப். விடுதிகளில் வசிப்பவர்களிடம் தேர்தலின் முந்தின நாள் காங்கிரஸ் ஊழியர்கள் சென்று அவர்கள் வோட்டுக்களைக் காங்கிரஸுக்கு அளிக்காவிட்டால், தேர்தல் முடிந்ததும் அவர்கள் யாருக்கு வோட்டுப் போட்டார்கள் என்பதை வோட்டுச் சீட்டின் மூலம் தெரிந்து கொண்டால் அவர்களுக்கு என்ன நேரிடும் என்று யோசித்துப் பார்க்கும்படி சொன்னதாகத் தெரிகிறது.

இது தவிர, ஒரு பெரிய ராஜாங்க உத்தியோகஸ்தரும் வோட்டுச் சீட்டை வாங்கினவர் இந்த நம்பர் குறிக்கும் முறையைப் பார்த்துவிட்டு, வேறு கட்சிக்கு வோட்டுப் போட்டது தெரிய வந்தால் தம் கதி என்னவாகுமோ என்று பயந்து, வாங்கிய சீட்டைத் திருப்பிக் கொடுத்து விட்டுத் திரும்பி விட்டார்.

ஆகவே பொதுவாக எல்லா ராஜாங்க உத்தியோகஸ்தர்களும், மற்றும் பெரிய வியாபாரிகளும் பின்னால் தங்கள் பெயர் இந்த வோட்டுச் சீட்டின் மூலம் கண்டு பிடிக்கப்பட்டு விட்டால் தங்களுக்கு என்ன நேரிடுமோ என்று பயந்து தங்கள் தங்கள் வோட்டுக்களைக் காங்கிரஸுக்கே போட்டு விட்டார்கள். இத்தகைய முறை இல்லாமல் நேர்மையான வாக்குப் பதிவு நடந்திருந்தால் அநேக தொகுதிகளில் காங்கிரஸ் மண்ணைக் கவ்வியிருக்கும் என்பது திண்ணம்.

பல்லாவரம்

2-3-62 **பி. கே. சேஷாத்திரி**

# உல்லாசத்தின் உச்சத்தில் ஐரோப்பாவைப் பாருங்கள்









தவணைமுறைப்படி டிக்கட் வழங்கும் பி. ஓ. ஏ. ஸி. திட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்—

**பயணம் முந்தி, பணம் பிந்தி!**

பி. ஓ. ஏ. ஸி. யினால் நியமிக்கப்பெற்ற உள்ளூர் ட்ராவல் ஏஜெண்டும், தவிர எங்கெங்குமுள்ள பி. ஓ. ஏ. ஸி. அலுவலகங்களும் உங்களுக்குப் பணிபுரியக் காத்திருக்கின்றன.

உலக முழுவதும் **B·O·A·C** உங்களை நன்கு பேணுகிறது

ஏயர் இந்தியா மற்றும் க்வான்டாஸ் அவர்களோடு கூட்டமைந்த பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏயர்வேஸ் கார்ப்பொரேஷன்.


பவழத் தீவு
11
கதை வாண்டுமாமா
சித்திரம் ரமணி
படகைக் காணாது போகவே உடனே கந்தன் அதைத் தேடுவதில் முனைந்தான். மரக்கிளைகளில் வெகுவேகமாகத் தாவிப் பாய்ந்து சென்ற கந்தன் நிலவொளியில் கண்ட காட்சி....?
ஆ! அதோ நம் படகு. அதைப் பிணைத்து இழுத்துச் செல்லும் படகு யாருடையது? நீரில் குதித்து நீந்திச் சென்றுதான் பார்க்க வேண்டும்.
அது என்ன சப்தம்? நீரில் யாரோ குதித்தது போல......
வெறும் பிரமை! பெரிய மீன் ஏதாவது துள்ளி இருக்கும்.
கந்தன் ஓசையின்றி நீந்தியபடி படகை நெருங்குகிறான்.
நிலவை மேகம் மறைத்த போது இரண்டு படகுகளையும் பிணைத்திருந்த கயிற்றைத் துண்டித்த கந்தன்....
காட்டுக் கொடிகளைப் பற்றி படகை எதிர்த் திசையில் உந்திச் செலுத்திக் கொண்டு போகிறான்.


மறுபடி நிலவு மேகத்திலிருந்து விடுபட்டு ஒளி சிந்தியபோது.....?
படகைக் காணுமே எப்படி மறைந்தது?
சரியாகமுடிந்திருக்க மாட்டாய். எங்காவது கரையோரமாக ஒதுங்கி இருக்கும்.
சதிகாரர்களின் பார்வையிலிருந்து வெகு தூரம் வந்துவிட்டேன் இனி பயமில்லை.
காலையில் கந்தனையும் படகையும் காணாது தவித்துப் போய் உட்கார்ந்திருக்கும் [illegible]
அதோ கந்தன். வருகிறான்.. படகுடன்!
சேனாபதியாரே, பார்த்தீர்களா? கந்தன் எப்படியும் வருவான் என்று சொன்னேனல்லவா?
இரவு நடந்ததைக் கந்தன் அவர்களுக்கு விளக்கித் திகைப்பிலாழ்த்துகிறான். பிறகு....
கந்தா, நாம் ஒரு இடத்தில் கொஞ்சம் தங்கிப் பிறகு பிரயாணத்தைத் தொடர்ந்தால் என்ன?
அப்படியே செய்யலாம்.
படகு கரை சேர்ந்ததும் சேனாபதி கூடாரமிட்டு உணவு தயாரிக்க வேண்டிய ஏற்பாடுகளை கவனிக்க ஆரம்பித்தார். [illegible] சுற்றிப் பார்க்க ஓடினார்கள்.
வெகுதூரம் போய் விடாதீர்கள். ஜாக்கிரதை.


இங்கிருந்து பார்த்தால் நதி வளைந்து வளைந்து செல்வது எத்தனை அழகாக இருக்கிறது
ஆனந்தா. மணி பயப் படுகிறது. ஏதோ அபாயம் நம்மைச் சூழ்ந்திருக்கிறது.
அதே சமயம்......
ஆனந்தா. ஓடு ஓடு! நாம் வளைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறோம்.
ஆனந்தா... ஐயோ! பெரிய பள்ளம்.
கீழே கீழே கீழே உருண்டு உருண்டு போய்க் கொண்டிருந்தார்கள்.
(தொடரும்)


ஓர் பிரிட்டானியா பாரல்
அஸார்ட்டெட் க்ரீம்ஸ் அல்லது ப்பாமிலி அஸார்ட்டெட்
பிஸ்கட்டுகள் நிறைந்தது
NORTHERN HEMISPHERE
GREENLAND
NORTH AMERICA
ATLANTIC
OCEAN
SAHARA
AFRICA
SOUTH AMERICA
INDIAN OCEAN
பிரிட்டானியா
பிஸ்கட்டுகள்
தி பிரிட்டானியா பிஸ்கட் கம்பெனி லிமிடெட்
JWTBC 4345M

...ஆயினுமென்ன? ரமேஷ் இதை அணியும்போதெல்லாம் அவனுடைய நண்பர்கள் 'புதியது' என்றே நினைக்கிறார்கள். காரணம் **பினிக்ஸ் பாப்ளினினால்** தயாரிக்கப்பட்டது இது. பினிக்ஸ் உறுதியான, சுருங்காத, வர்ணமயமான, ஸான்போரைஸ்ட் பாப்ளின்களைத் தயாரிக்கிறது. பிரகாசமான, விந்தையான விதவித வர்ணங்கள்...கவர்ச்சியான அமைப்புக்கள்... அலாதியான பிரிண்டுகள்...ரூ. 1-12 லிருந்து ரூ. 2-25 விலையில் கிடைக்கும் இவை சிக்கனமானவை, நீடித்து உழைப்பவை, பலதிறப்பட்டவை. குடும்பத்திலுள்ள மாதருக்கான பினிக்ஸ் வாயில்களும் உண்டு.



# பினிக்ஸ் மில்ஸ்

ஒரு ரூயா ஸ்தாபனம்

மதுரை, சென்னை, பெங்களூர் லக்னௌ, பூனா, கான்பூர், பம்பாய் செகந்திராபாத், நாகபுரி கோல்ஹாபூர் ஆகிய இடங்களில் ரூயா கடைகள் உள்ளன

இந்தச் **சட்டை** தைத்து **ஒன்பது** மாதங்கள் ஆகின்றன!

RPY-2-TAM.

# திருமூலர் தவமொழி

ராஜாஜி

இசாமு

## 49

இறைவனை நாடிக் கண்டுகொண்ட பின்பு, வேறு எவ்வித ஆசாபாசங்களும் இல்லாமல், மோன சமாதியிலே இருந்த அந்த அனுபவத்தைப் பாடுகிறார் திருமூலர்.

**மெய்த்தவத் தானை**

மெய்யான தவத்திற்கு இலட்சியமும் பயனுமாக விளங்குகிற இறைவனை.

**மெய்த்தவத் தானை.**
**விரும்பும் ஒருவர்க்கு**

**கைத்தலம் சேர்தரு**
**நெல்லிக் கனிஒக்கும்**

**சுத்தனை —**

[விரும்பும் ஒருவர்க்கு — நாடுகிற பக்தர்கள் யாராயிருந்தாலும் அவருக்கு. கைத்தலம் சேர்தரு—உள்ளங் கையிலே வைத்திருக்கும். நெல்லிக் கனிஒக்கும்—நெல்லிக் கனி போன்ற. சுத்தனை—மாறுபாடில்லாத உறுதிப் பொருளாகிய இறைவனை.]

**சுத்தனைத் தூய்நெறி**
**யாய்நின்ற தேவர்கள்**

**அத்தனை—**

[தூய் நெறியாய் நின்ற—தூய மார்க்கத்திலே நிற்கிற. தேவர்கள் அத்தனை—தேவர்களுக்கு அப்பனாகிய முழுமுதற் கடவுளை. அத்தன்—அப்பன்.]

**அத்தனை நாடி**
**அமைந்தொழிந் தேனே**

[நாடி — உள்ளத்தால் விரும்பி. அமைந்தொழிந்தேனே — வேறு எவ்வித சலனமும் இல்லாமல், மனத்தின் வாதனைகள் அறவே ஒழிந்து அமர்ந்து விட்டேன்.]

**மெய்த்தவத் தானை**
**விரும்பும் ஒருவர்க்குக்**
**கைத்தலம் சேர்தரு**
**நெல்லிக் கனியொக்கும்**
**சுத்தனைத் தூய்நெறி**
**யாய்நின்ற தேவர்கள்**
**அத்தனை நாடி**
**அமைந்தொழிந் தேனே.**

இனி, இப்படி இறைவனை நாடி வேறு எவ்விதமான எண்ணங்களும் இல்லாமல், யோகத்தில் அமர்ந்திருப்பது எல்லாருக்கும் கைகூடுகிற காரியமா? எனவே, பக்தர்களுக்கு ஒரு வழியை உபதேசிக்கிறார் முனிவர்.

**விரும்பில் அவன் அடி**
**வீர சுவர்க்கம்**

[விரும்பில்—உண்மையான பக்தி செலுத்தினால். அவன் அடி—இறைவனுடைய திருவடியே. வீரசுவர்க்கம்—மாட்சி பொருந்திய வீரர்களுக்குக் கிடைக்கின்ற பெரும் பதவியாகும்.]

**பொருந்தில் அவன்அடி**
**புண்ணிய லோகம்**

[பொருந்தில்—உள்ளம் பொருந்தி நின்றுவிட்டால் போதும். அவன் அடி—இறைவனுடைய திருவடியே. புண்ணிய லோகம்—புண்ணியம் செய்த பெரியோர்களுக்குக் கிட்டுகிற பேரின்ப உலகமும் ஆகும்.]

**திருந்தில் அவன்அடி**
**தீர்த்தமும் ஆகும்**

[திருந்தில் — மனம் கள்ளமின்றி மெய்யான நிலையிலே நின்றால். அவன் அடி—இறைவன் திருவடியே. தீர்த்தமும் ஆகும்—பாவங்களைக் கழுவுகிற புண்ணிய நதிகள் ஆகும்.]

வீரர்கள் தங்கள் உயிரைக் கொடுத்துப் பெறுகிற வீரசுவர்க்கமும், தவம் செய்வோர் பெறுகிற புண்ணிய உலக

மூம். புனித நதிகளிலும் மற்றத் தீர்த்தங்களிலும் குளித்துப் பெறும் பாப விமோசனமும், எல்லாம், ஈசன் திருவடிகளில் மனம் செலுத்துவதனால் பெற முடியும்.

'தீர்த்தம்' என்ற வடமொழி 'தாரி' என்பதிலிருந்து வந்தது. 'தாரி' என்றால் 'தாண்டச் செய்தல்' என்று பொருள். கங்கை முதலிய புண்ணிய நதிகள் மக்களைப் பாவங்களைத் தாண்டச் செய்வதால் அவை 'தீர்த்தம்' என்று சொல்லப்படுகின்றன.

திருந்தில் அவன் அடி
தீர்த்தமும் ஆகும்

இந்தனை பயன்களும் யாருக்குக் கிடைக்கும்?

வருந்தி அவன் அடி
வாழ்த்தவல் லார்க்கே

உண்மையான உருக்கத்தோடு எம்பெருமானுடைய திருவடியை எண்ணித் துதிக்கிற பக்தர்களுக்கு, எல்லாப் பயனும் அவனுடைய திருவடியே தரவல்லது என்கிறார் முனிவர். அதாவது இறைவன் திருவருளே எல்லா நலமும் வழங்கக் கூடியது. அந்தத் திருவருளுக்காக நாம் செய்ய வேண்டிய பக்தியோகம் என்ன? இறைவனிடத்தில் மெய்யான விருப்பம் செலுத்துவது. திருவடியிலே மனம் நன்கு பொருந்தி நிற்பது. தீய எண்ணங்களிலிருந்து மனம் திருந்துவது. இவையே திருவடியின் திருவருளை நாடுவார்க்குரிய கடமைகள் என்பது முனிவர் உபதேசம்.

விரும்பில் அவனடி
வீர சுவர்க்கம்

பொருந்தில் அவனடி
புண்ணிய லோகம்

திருந்தில் அவனடி
தீர்த்தமும் ஆகும்

வருந்தி அவனடி
வாழ்த்தவல் லார்க்கே.

வேறு வேறு நிலைகளிலே, வேறு வேறு முறையாக வழிபாடு செய்து பயனை அனுபவிக்கிறார்கள், அடியார்கள். ஆனால் எல்லாருக்கும் எக்காலத்தும், எல்லாம் தரவல்லது இறைவனுடைய திருவடியே!


நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்!
புதுமை பெறுக...
இதம் பெறுக...
நளினமாய் இருங்கள்
நாள் முழுதும்!
குளுமையையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள் நாள் முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது. உன்னத மனோரம்மிய மணம்கொண்ட சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்து, உங்கள் அழகை நன்கு சோபிக்கச் செய்கிறது!
சார்மிஸ்
உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்
CHTP. G. H

# வாழ்க்கைப் பயன்

பீஷ்மன்

காலை ஏழு மணியிருக்கும். செய்தித்தாளைப் பிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

''விஷயம் தெரியுமா உங்களுக்கு?'' என்று எதிர்த்த வீட்டிலிருந்து வந்து கொண்டிருந்த ராஜம் கேட்டாள். பத்திரிகைகளிலெல்லாம் இடம் பெறாத சுவாரசியமான செய்திகளைச் சேகரித்துக் கொடுப்பதில் ராஜத்துக்கு நிகர் ராஜம்தான்.

''சொன்னால்தானே தெரியும்'' என்று வேடிக்கையாகக் கேட்டுக்கொண்டே நிமிர்ந்த போதுதான் அவள் முகத்தில் நிலவிய பரபரப்பை உணர்ந்தேன்.

''போதுமே உங்க விளையாட்டும் நீங்களும், சமய சந்தப்பமில்லாமல்! அலமேலு மாமி போயிட்டாளாம் திடுமென்று! என்ன அநியாயம்!''

''எந்த அலமேலு மாமி, ராஜம்?''

''உங்கள் சிநேகிதர் ராகவனோட சம்சாரம்தான்!''

அசுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருந்த என்னை அவள் பதில் தூக்கிவாரிப் போட்டது. செய்தித்தாளைக் கீழே வீசிவிட்டு எழுந்தேன்.

''ராகவன் சம்சாரமா? யார் சொன்னா?''

''ஆமாம்னா! எதிர்த்தவீட்டுத் தாத்தா புறப்பட்டுண்டு இருக்கார் அங்கே. என்னமோ திடீரென மாரடைப்பிலே கண்ணை மூடிட்டாளாம் பாவி! மூணு குழந்தைகளையும் அந்த மனுஷனையும் கண்ணைக் கசக்க விட்டுட்டு! அந்த யமனுக்குத்தான் இப்படிக் கண்ணில்லாமல் போகுமோ!''

ராஜத்துக்கு ஒயத் தெரியாது. நான்தான் அவள் சொன்ன செய்தியைக் கேட்டு ஓய்ந்து அயர்ந்து போனேன். ராகவன் இதை எப்படித் தாங்கப் போகிறான்! தட்டுத் தட்டாக மூன்று குழந்தைகள். ஒன்றுக்காவது விவரம் புரிகிற வயசில்லை. மூத்ததிற்கே ஏழோ எட்டோதான் இருக்கும் வயசு. குடும்ப நிர்வாகம் முழுவதையுமே தன் தோள் மீது தாங்கிக் கொண்டிருந்த அந்த உத்தமி இப்படித் திடீரென்று கண்ணை மூடிவிட்டாளே! வீட்டுக்கு என்ன வேண்டும், எவ்வளவு வேண்டும் என்ற கவலைகூட ராகவனுக்குக் கிடையாது. உள்ளூர் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராக இருந்தான் அவன். 'பள்ளிக்கூட வேலை, டியூஷன்' இவை தவிர அவனுக்கு வீட்டுச் சிந்தனைகளையே விட்டு வைக்காமல் அவள்தான் இத்தனை நாட்களாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தாள். கண்ணைக் கட்டிக் கொண்டு போய் நடுக்காட்டில் நள்ளிரவில் நிறுத்தியதே போன்ற இந்த நிலையை ராகவன் எப்படிச் சமாளிக்கப்போகிறான்?

''நீங்க புறப்படலையா அங்கே?''

பிரமித்துப் போய் நின்றுவிட்ட என்னை ராஜத்தின் கேள்விதான் உலுப்பியது.

''இதோ.....!''

காலையில் கண் விழிக்கும் போது இன்றைக்கு இப்படியொரு நிகழ்ச்சியில் கலந்துகொள்ளப் போகிறோம் என்று நினைத்திருப்பேனா? நினைப்பறியாதனவெல்லாம் எப்படிப் பொக்கென நிகழ்ந்து விடுகின்றன!

துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு கிளம்பினேன். தெருவே இந்த அகால மரணம் குறித்துத்தான் அங்கலாய்த்துக் கொண்டிருந்தது.

வீட்டுத் திண்ணையை அடுத்த நடையில் சுவரில் சாய்ந்தவாறு சோக பிம்பமாய் உட்கார்ந்திருந்தான் ராகவன். மூத்த பெண் சக்கு விவரம் புரிந்தோ புரியாமலோ 'கோ' வென்று கதறிக் கொண்டிருந்தது. மற்றக் குழந்தைகளை அங்கே காணவில்லை. திண்ணையிலும் தெருவிலும் கும்பல் கும்பலாக ஊரார் அதற்குள் கூடிவிட்டார்கள். நடப்பதை உணராது நடுக் கூடத்தில் நித்திய சுமங்கலியாய் நீட்டி நிமிர்ந்து மீளா நித்திரையில் ஆழ்ந்து கிடந்தாள் அவள்.

''என்னடா அநியாயம் ராகவா இது...?''

இத்தனை நேரமாய் எப்படித் தேக்கி வைத்திருந்தானோ அத்தனை கண்ணீரையும் என்னைக் கட்டிக் கொண்டு பச்சைக் குழந்தை போலக் கதறித் தீர்த்து விட்டான்.

''பாரு. உன்னைப் பார்த்துக் குழந்தைகளெல்லாம் அழறது. கொஞ்சம் சமாதானப் படுத்திக்கோ. என்ன பண்ணலாம்!''

பெரியவர் ஒருவர் அவனிடம் ஆதரவாகக் கூறினார். எனக்குச் சகிக்கத்தான் இல்லை.



மெல்ல அவனிடமிருந்து விடுபட்டுக் கண்ணைத் துடைத்துக் கொண்டு வாசல் பக்கம் வந்தேன். என்ன துயரம் இது!

''என்னடா அநியாயம் இது ராகவா!''

'டொக்கு டொக்'கென்று தடியை ஊன்றிக் கொண்டு கோதைப் பாட்டி வந்து விட்டாள் துக்கம் விசாரிக்க. அவளுக்குக் காது தான் கொஞ்சம் மந்தம். எண்பது வயதைத் தாண்டி விட்டதனால் விளைந்த கோளாறு தான் அதுவும். மற்றப்படி அவளுக்கு எவ்வித் தளர்ச்சியும் கிடையாது.

கூடியிருந்தவர்கள் எல்லாருமே அவளை அப்போது ஒரு திகைப்போடு தான் பார்த்தார்கள்.

''யமனுக்கு இந்தக் கிழம் கட்டைகளெல்லாம் கண்ணுக்குத் தெரிகிறதில்லே, பாருங்களேன். இன்னும் இப்படி எத்தனை சின்னச் சாவைப் பார்க்கக் காத்திண்டிருக்கோ இது!''

கிழவிக்குக் காது கேட்காது என்ற தைரியத்தில் மனத்தில் பட்டதை உரக்கவே சொல்லி விட்டார் ஒருவர். கோதைப் பாட்டியை அந்தக் கூட்டத்தில் பார்த்தவுடன் எல்லார் மனத்திலும் இப்படிப்பட்ட எண்ணம்தான் தோன்றியிருக்கவேண்டும். இவள் இன்னும் எதற்காக 'வாழ்ந்து' கொண்டிருக்கிறாள்? தோன்றக் கூடாத நினைப்புத்தான். ஆயினும் தோன்றி விட்டதே! ஒரு ஜீவனின் வாழ்க்கை அவசியத்தைப் பற்றி ஆராய எனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? இருந்தாலும் கோதைப் பாட்டியின் வாழ்க்கையை அறிந்தவர்கள் மனத்துக்குள் அந்தரங்கமாகவேனும் இப்படி நினைக்காமல் இருக்க முடியாதுதான்.



ஊரிலே வாழ்கிறவர்களில் அதிக வயதான ஆத்மா கோதைப் பாட்டிதான். பதினெட்டு வயதில் வாழ்விழந்து போனவளாம் அவள். அவள் வாழ்க்கையின் ஆரம்ப இடி அது. அதன் பிறகு தன் பிறந்தகத்திலே போய் ஆணும் பெண்ணுமாய்ப் பெற்றெடுத்திருந்த இரு குழந்தைகளுடனும் சில ஆண்டுகளைக் கழித்திருக்கிறாள். அவள் அங்கு குடியேறிய வேளையோ என்னவோ அவளைப் பெற்றவர்கள் கண்ணை மூடிவிட்டார்கள். பீமசேனன்களாக மூன்று அண்ணன்மாரும் ஒருவர்பின் ஒருவராகப் போய்ச் சேர்ந்து விட்டார்கள். அதுதான் போகட்டுமென்றாலும் பெற்றுப் பேணி வளர்த்து ஏராளமான பொருட் செலவில் கல்யாணமும் நடத்தி வைத்தாளே, அந்தப் பெண்ணும் பிள்ளையுமாவது இவள் கண் மூடும் வரை வாழக் கூடாதோ?

பெண்ணை நல்ல இடமாகப் பார்த்துத்தான் கொடுத்திருந்தாள். மாப்பிள்ளை வடக்கே எங்கேயோ ஆயிரம் ரூபாய் சம்பளத்தில் இருந்தான். பெண்ணுக்கு நான்கைந்து குழந்தைகள். எல்லாம் இருந்தென்ன? ஐந்து வருடங்களுக்கு முன் ஒரு ரயில் விபத்தில் அம்மாளைப் பார்க்க வரும் வழியில் மண்டையைப் போட்டுத் தொலைத்தது அது. பிள்ளை ராஜாவாக, உள்ளூரிலேயே உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்தான். என்னவோ வயிற்றுக் கோளாறு வந்து ஒரு வருஷம் அவதிப் பட்டான். ஆயிற்று. அவன்

போய்ச் சேர்ந்தும் மூன்று வருடங்கள் ஓடி விட்டன. நல்ல வேளை! அவனுக்குக் குழந்தை குட்டி ஏதும் இல்லே.

நாட்டுப் பெண் சமைத்துப் போடுகிறாள். இத்தனை துக்கங்களுக்குப் பின்னும் தெம்போடு அதைச் சாப்பிட்டுக் கொண்டு கோதைப் பாட்டி வளைய வந்து கொண்டு தான் இருக்கிறாள்.

''ஏன் பாட்டி. நீ சாகாவரம் வாங்கிண்டு வந்திருக்கயோ?'' சில துணிச்சல்காரப் பிள்ளைகளெல்லாம் நேரிலேயே அவளிடம் இப்படிக் கேட்பதுண்டு.

பாட்டிக்குக் கோபம் வராது எப்போதுமே. கேட்கிற பையனைப் பார்த்துச் சிரிப்பாள்.

''என்னமோ அப்பா. நானு ஒரு வரமும் கேக்கலே. அவனுக் கொடுத்துட்டான் போல் இருக்கு....!''

சிரித்துக் கொண்டே இப்படிச் சொல்லி விட்டு 'டொக்கு டொக்'கென்று கைத்தடியை ஊன்றிக் கொண்டு போய் விடுவாள்.

'வாழ்வதும் சாவதும் நம் கையில் இல்லே' என்ற உண்மையை அவனுக்கு அவன் வாழ்வே உணர்த்தி விட்டது. அதை நன்றாகப் புரிந்து கொண்ட அவன் எதையும் லட்சியம் செய்யாமல் நாட்களை ஓட்டக் கற்றுக் கொண்டிருந்தான்.

ராகவனின் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டு அவனுக்கு ஆறுதல் கூறிக் கொண்டிருந்தாள் பாட்டி. காலமே கிழவி வேடம் தாங்கி வந்து அவன் பக்கத்தில் உட்கார்ந்திருப்பது போலத் தான் தோன்றியது.

'இந்தச் சாவு என்னைத் தேடி வராமல் இவனைத் தேடி வந்து விட்டதேடா!' என்று இப்படி ஏதாவது சொல்கிறாளோ?

நடையில் போய் நின்றேன்.

பாட்டி வேதாந்தம் தான் பேசிக் கொண்டி



ருந்தாள். -- ''உசிர் ஒண்ணுமட்டும் மனுஷன் கையிலே இல்லேடா அப்பா. அவனுக்குக் கொடுத்து வச்சது அவ்வளவுதான். நீ இப்படி இடிஞ்சு போயிட்டாக் குழந்தைகளை எப்படிக் காப்பாத்தறது? மனசைத் தேத்திக்கோ. உன் தெம்பிலே தானே அதுகள் நிக்கணும். தைரியப்படுத்திக்கோ மனசை.''

ராகவனுக்கு அவள் பேச்சு பிடித்ததோ இல்லையோ. நடுக் கூடத்தில் படுத்துக் கிடக்கும் மனைவியின் சடலத்தையும் எண்பது ஆண்டுகளை விழுங்கி விட்டு எதிரே உட்கார்ந்து வேதாந்தம் பேசும் கோதைப் பாட்டியையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

காரியங்கள் நடந்து கொண்டிருந்தன, இயந்திர கதியில்.

அவன் வாழ்வில் பங்கு தேடி அவனுடன் வந்து ஒண்டிக் கொண்டவளைக் காடேற்றி வைத்தான் ராகவன். ஆயிரம்தான் என் உயிர் என் சதை என்றெல்லாம் இணைத்துப் பிதற்றிக் கொண்டிருந்தாலும் முடிவு என்னவோ இப்படித்தானே ஆகி விடுகிறது!

காரியங்கள் முடிந்து நாங்கள் வீடு திரும்புகையில் மணி மூன்றடித்து விட்டது.

நாங்கள் திரும்புவதற்கு முன்பே ராஜம் குழந்தைகளைக் குளிப்பாட்டி அழைத்துக் கொண்டு போய்ச் சாப்பிடச் செய்து விட்டாள். ராகவனுக்குப் பசி தாகமே இல்லை. மன்றாடி அழைத்துப் பார்த்தேன். நிர்த்தாட்சிண்யமாய் மறுத்து விட்டான். ராஜம் கொண்டு வைத்திருந்த சாப்பாடு சமையலுள்ளில் தூங்கிக் கொண்டிருந்தது.

ராகவன் முகட்டு வளையைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

''ஒரு மாசம் நோயாகக் கிடந்து நான் அவளுக்குச் சிசுருஷை செய்து அதன் பிறகு அவள் போயிருந்தால் கூடப் பரவாயில்லேடா ராஜு. ஒரு வார்த்தை பேசாமல் இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் போய்ச் சேர்ந்து விட்டாளே!'' என்று புலம்பிக் கொண்டிருந்தான் அவன்.

ஆறுதல் கூறி ஆற்றக் கூடிய துயரமா அது?

பக்கத்து வீட்டுப் பெரியவரை அவனுக்குத் துணையாக உட்கார வைத்து விட்டு வீட்டுக்குப் புறப்பட்டேன். கடைக்குட்டி அவன் பக்கத்தில் தரையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தது. மற்ற இரண்டு குழந்தைகளும் வெளியில் எங்கோ விளையாடச் சென்றிருந்தன. காலமே ஸ்தம்பித்து விட்டதைப் போன்று அங்கு நிலவிய மோனத்தில் அவனை விட்டு விட்டுப் புறப்பட்டேன்.

ஃ

இரண்டு மூன்று நாட்கள் ஓடி விட்டன. ராகவன் பித்துப் பிடித்தாற் போல் ஆகி விட்டான். முதல் நாளிலிருந்த பிதற்றல்களைக் கூட அப்புறம் அவனிடம் கேட்க முடியவில்லை. எப்போது பார்த்தாலும் நடுக் கூடத்தில் சுவரில் சாய்ந்தவாறு முட்டைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். குழந்தைகளை ராஜம் கவனித்துக் கொண்டிருந்தாள். அவை சாப்பிட்டனவா இல்லையா என்பதைப் பற்றிக்கூட அவன் யாரிடமும் விசாரிக்கவில்லை. அவை அவை தாமே நடைபெறும் என்று நம்பியிருந்தானோ. இல்லை. அதையெல்லாம் சிந்திக்கும் நிதானமே தான் இல்லையோ!

எல்லாம் போகப் போகச் சரியாகி விடும் என்று நான் அமைதியடைந்தாலும் ராஜம் விடுவதாக இல்லை. தூக்கம் வருகிறவரை அவனுக்கு ஒரே தொணதொணப்புத்தான்.

''ஆமாம், உங்க சிநேகிதர்கிட்டே பேசிப் பார்த்தேளா? அந்த மனுஷன் பாட்டுக்கு இப்படி இடிஞ்சு போய் உட்கார்ந்திருக்காரே. அப்புறம் இந்தக் குழந்தைகள் கதி என்ன ஆகிறதாம்! புண்ணியவதி போய்ச் சேர்ந்துட்டா. அந்த மனுஷன் குழந்தைகள் முகத்தைப் பார்த்துப் பேசமாட்டேன் என்கிறாரே!''

''என்னை என்ன செய்யச் சொல்கிறாய், ராஜம்?''

''பாலையும் சட்டியும் பண்ணச் சொல்றேன். ஆளைப் பாரு ஆளை. ஏதாவது பேசி மனுஷனைக் கொஞ்சம் தேற்றுவேளா! — மூத்தது கொஞ்சம் விவரம் தெரிஞ்சதில்லையா? 'அப்பாவுக்கு எங்களைக் கண்டால் பிடிக்கலேயில்லே, மாமி!' என்று சொல்லி அழறது.''

''நான் எவ்வளவோ ஆறுதல் சொல்லத்தான் செய்கிறேன், ராஜம். அவன் எதையாவது காதில் போட்டுக் கொண்டால்தானே உப்பும் தண்ணியும் சேரச் சேரத் தானே சரியாகும்!''

''உங்களுக்கு ஒரு தனிப் பேச்சு. சாப்பிட்டான்னு உப்பும் தண்ணியும் சேரப் போறது. மனுஷன் தான் காப்பித் தண்ணியைக் குடிச்சுட்டுக் கிடக்கிறாரே!''

அவளிடம் பேசி வெல்ல முடியாது.

மறுநாள் அவனிடம் குழந்தைகள் பற்றிப் பேசினேன்.

''நீ சொல்றது சரிதான்டா ராஜு. அதுகள் முகத்தைப் பார்த்ததுமே அவமேது தான் முன்னாலே நிக்கறு. அப்போ நான் படற அவஸ்தையைச் சொல்லிப் புரிஞ்சுக்க முடியாது. நான் என்ன பண்ண. ...? இந்த வீட்டிலே எதையுமே பார்க்க முடியலே.. அப்படி எல்லாத்திலேயும் அவள்தான் தெரியறா! என்னமோ போ!''

'அவள் இழப்பு ஈடு செய்ய முடியாதது. சின்னத் துன்பம் கூடத் தாங்கிப் பழக்கப்படாத மனசு அவனுக்கு. அதனால் தான் இப்படிப் பொறி கலங்கித் தவிக்கிறான். காலம் தான் மருந்தாக வேண்டும்' என்று எண்ணிக் கொண்டேன்.

அவள் போய்ச் சேர்ந்தும் ஒரு வாரம் வேகமாக ஓடிவிட்டது.

காலைக் காப்பி குடித்துக் கொண்டிருக்கையில் ராஜம் புதிய செய்தியொன்றைக் கொணர்ந்தாள்.

''கோதைப் பாட்டி காலம் கார்த்தாலே குளத்திலே படி தடுக்கிக் கீழே விழுந்துட்டாளாம். வேடிக்கையைப் பார்த்தேளா — அந்தக் கிழத்துக்கு உசிர் கெட்டிதான்!''

என்ன விசித்திரமான வாழ்க்கை இது. குளத்திலே விழுந்தும் கூடக் கிழம் உயிர் பெற்று விட்டது. வீட்டிலே உட்கார்ந்திருந்த ராகவனின் மனைவி உட்கார்ந்த நிலையிலேயே உயிரை விட்டு விட்டாள்.

கிழவியைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று கிளம்பினேன்.


பண்டிட் டி.கோபாலாச்சார்லுவின்
ஜீவாம்ருதம்
ஆரோக்யத்துக்கும் பலத்துக்கும்
ஆயுர்வேதாஸ்ரமம் (பிரைவேட்) லிட்.
மதராஸ்-17


பாமாலிவ் உபயோகத்தினால் வளரும்
நீண்ட அடர்த்தியான கேசம்
மிக அழகிய கூந்தல்
அலங்கரிப்புக்கு
இயற்கையாக அமைகிறது!
பாமாலிவ்
பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்
மூன்று வசீகரிக்கும் வாசனைகள்: லவண்டர்-மல்லிகை-ரோஜா


பர்கோ-லாக்ஸ்
இனிப்பான மலமிளக்கி வில்லைகள்
மலச்சிக்கல் பித்தம் வாயு
நிவாரணி
DAWN & COMPANY (P) LTD, BOMBAY-2

பாட்டி மூக்கி முனகிக் கொண்டு படுத்திருந் தாள். நான் எதிர்பார்க்கவேயில்லே. ராகவன் அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான்.

''என்ன இது பாட்டி......?''

''பெண்டாட்டி உசிரைக் காப்பாத்தத் தெரியாமல் திண்டாடி நிற்கிறான். கர்ம சிரத்தையாக் கருக்கல்லே என்னே வந்து காப் பாத்திட்டான்!'' என்றாள் பாட்டி.

''யாரு ராகவனா?'' என்றேன் வியப்போடு. பாட்டி 'ஆமாம்' என்று தலையை ஆட்டினாள்.

''என்னடா ராகவா....?''

''சாவகாசமாச் சொல்லறேன்...!'' என்று வெகு அமைதியாகப் பதிலளித்தான்.

''இப்போ எப்படியிருக்கு பாட்டி?''

''ஆத்திலே குளத்திலே உயிர் போகாமல் வீட்டிலே வந்து போகப் போறது. இனிமேல் தாங்காதுடாப்பா!'' என்றாள் அவள்.

நான் கிளம்புகையில் ராகவன் வந்தான்.

''காலங் கார்த்தாலே நீ எங்கே குளத்துக் குப் போனாய்? அந்தக் கிழம் நாலு மணிக்கெல் லாம் குளிக்கக் கிளம்பிடுமே!'' என்று ராகவ னிடம் கேட்டேன், நடந்து கொண்டே.

ராகவன் சிரித்தான். ஏழு நாட்களுக்குப் பிறகு அவன் இப்போதுதான் சிரிக்கிறான். அதில் மகிழ்ச்சியில்லாது போனாலும் துயரமும் இல்லேதான். போதம் தெளிந்த சிரிப்பாக ஒலித்தது அது.

''தற்கொலை பண்ணிக்கப்போயிருந்தேன்!'' என்றான் வெகு அமைதியாக.

''அடப் பாவி....!'' — நடந்து கொண்டே வந்தவன் அவன் சொன்னதைக் கேட்டதும் நின்று விட்டேன்.

''அப்புறம்....?''

''பரபரப்படையறதுக்கு ஒன்றுமில்லே. ஒரு வாரமாவே இப்படித்தான் புத்தி போய் விட்டது. நேத்துராத்திரி பூராத் தூக்கமில்லே. காலங் காத்தாலே நாலு மணியிருக்கும். குளத்தை நோக்கி நடந்தேன். இருட்டுக் கலே யலே. பகவானே நினைச்சுண்டு தண்ணியிலே குதிக்கறதுக்குக் கரை மேலே ஏறி நின்றேன். 'அய்யோ அப்பா.... யாருமே இல்லேயா டாப்பா' ன்னு அலறல் சத்தம் கேட்டது. குதிக்கக் கிளம்பின வேகம் அடங்கிப் போச்சு. சத்தம் வந்த திசையில் ஓடினேன். போய்ப் பார்த்தால் படித்துறையில் பாட்டி விழுந்து கிடக்கிறா. மேலே வந்து அலே மோதிண்டு இருந் தது. இன்னும் கொஞ்ச நேரமாயிருந்தால் அலே இழுத்துண்டுபோயிருக்கும் பாட்டியை.''

''உன்னேக் காப்பாத்திக்கத் தைரியமில் லாமல் போய் அவளேக் காப்பாத்தினயாக் கும்..........!''

''இல்லேடா ராஜு. தன்னேயும் என்னேயும் அவள்தான் காப்பாத்தினள். கிழவி சாகப் பயப்படலே. தண்ணியிலே விழுந்து சாகக் கூடாதாம். சொல்லறு. கரையிலே அவளேத் தூக்கிக் கொண்டு வந்து போட்டதும் சொன் னேன்: 'பாட்டி உனக்கு உசிர் கெட்டிதான்' என்று. அதற்கு அவள் என்ன சொன்னுள் தெரியுமோ? 'போற உசிர் அந்த நேரத்திலே தான் போகும். நாமா அதைப் போக்கவும் முடியாது; போகவிடவும் கூடாது!' என்றாள். அவள் எந்த அர்த்தத்திலே சொன்னுளோ? எனக்கு மூணு குழந்தைகள் இருக்கு பின்னலே. அவளுக்கு யார் இருக்கா? அவளே துணியாத போது நான் போய் .....!''

ராகவன் பாதியில் பேச்சை நிறுத்தி விட்டான்.

''இன்னிக்குப் பாட்டி விழுந்து உன்னேத் தடுத்துட்டா. தினம் உன்னே யார் வந்து தடுக்க முடியும்? உனக்கு ஏன்டா புத்தி இப்படிப் போச்சு?''

''இனிமேல் அதற்கு அவசியம் இல்லேடா ராஜு. நான் அப்படியெல்லாம் போக மாட் டேன். கவலேப்படாதே. கோதைப் பாட்டி யாருக்கு எப்படியோ, என்னேப் பொறுத்த வரையில் என் குடும்பத்தைக் காப்பாத்தி னவள் அவள்தான்!''

ராகவன் நிஜமாகவே மாறித்தான் போய் விட்டான்.

கோதைப் பாட்டியின் கதை ஒரு மாதத்தி லேயே முடிந்து விட்டது.

''எண்பது வருஷம் வாழ்ந்து அவள் என் னத்தைக் கண்டாள்?'' என்று ஊர் பேசிக் கொண்டிருந்தது.

எண்பது வருஷங்கள் அவள் வாழ்ந்து....

நான் ராகவனேத்தான் நினேத்துக் கொண் டேன். தூக்குக் கயிற்றில் அவன் தலேயை நுழைத்துக் கொள்கையில் கோதைப் பாட்டி ஓடி வந்து சுருக்கை அவிழ்த்துத் தூர எறிந்து விட்டு அவன் காலடியில் விழுந்து மறைவதைப் போல என் மனக்கண் முன் ஒரு காட்சி தோன்றி மறைந்தது.

'இறைவனின் படைப்பு ஏதும் வீணுவ தில்லே' என்று மனத்துக்குள் முனகிக் கொண்டேன்.

# மனம்போனபடி



## வடவேங்கடவன்

### கண்ணும் பல்லும்

ஒரு திருமண வீட்டுத் திண்ணை. வாண்டுப் பயல்கள் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தனர். சிற்சில சமயங்களில் சிறுவர்கள் பேச்சு நல்ல முறையில் சுவை பட அமைவதுண்டு. பெரியவர்கள் பேச் செல்லாம் அவ்வளவு சுவையோடு இரா. இயற்கையான உயிர்த் துடிப்பும் உணர்ச் சிப் பெருக்கும் அவற்றில் முட்டி மோதும்.

தத்தம் தந்தையின் தொழில்கள் பற்றிய பேச்சு.

"உன் தந்தை என்னடா பண்ணுகிறார்?" என்றான் ஒருவன்.

"டாக்டரடா என் தந்தை!"

"என் தந்தையும் டாக்டர்தான்."

"உன் அப்பா என்ன டாக்டர் வேலை பார்க்கிறார்?"

"பல் டாக்டர். உன் அப்பா?"

"கண் டாக்டர்."

இங்குதான் மோதலின் தொடக்கம்.

"யாரடா பெரியவர் — கண் டாக்டரா, பல் டாக்டரா?" இப்படிக் கேள்வி ஒன்றைக் கிளப்பி விட்டான்.

'கண் டாக்டரே பெரியவர்' என்றான் கண் டாக்டர் மகன். 'அல்ல' என்றான் பல்கலைக் கழகப் பட்டதாரியின் மைந்தன்.

"உன் தந்தை எத்தனை ஆண்டுகள் படித்தார் கண் டாக்டராக?" எனப் பாய்ந்தான் பல் வைத்தியரின் வக்கீல்.

"ஓராண்டு. உன் அப்பா எத்தனை வருடங்கள் படித்தார்?"

"இரண்டு வருடங்கள். போதுமா, என் தந்தையின் படிப்புத்தான் பெரிது. என்ன சொல்கிறாய்?"

கண் வைத்தியரின் மகன் வாய் திறக்கவே இல்லை. மற்றவன் மேலே பேசலானான் — "என்டா, முப்பத்திரண்டு பற்களுக்கே இரண்டு ஆண்டுப் படிப்புத் தான். உன் தந்தை போயும் போயும் இரண்டே கண்களுக்காக ஒரு முழு வருடம் படித்தாரா? நான் அதுக்கு மேலே ஒன்றும் சொல்ல மாட்டேன்."

கண் டாக்டரின் மகன் ஒரு நொடிப் போதில் சமாளித்துக் கொண்டதோடு, அழகாக மற்றவனைத் தூக்கி யெறிந்து விட்டான்—"நீ கேட்பது ரொம்ப நியாய மான கேள்விடா. இரண்டே கண்களுக்கு ஓர் ஆண்டு முழுதும் என் தந்தை படித்தார் என்றால், அதற்குக் காரணம் உண்டு. சொல்வேன். கோபித்துக் கொள்ளக் கூடாது."

"சொல்லேன்."

"கண் வைத்தியம் என்றால் சொல்லட்டுமா? இதோ சொல்லப் போகிறேன் — குறட்டை வைத்துக் கொண்டு கண்ணைப் பிடுங்கியெறிவதில்லை. இப்போதாவது தெரிந்து கொள்."

திண்ணை முழுவதும் ஒரே கேலிச் சிரிப்பு எழுந்தது.

"நீயே சொல்லு. உன் தந்தை வேறே என்ன செய்வார்? பல் வலி யென்று யாராவது போனால், நாற்காலி யில் உட்கார வைத்து வலி தெரியா திருக்க ஓர் ஊசியைப் போட்டு விட்டு, அந்த மனிதரின் பல்லைப் பிடுங்குவார். என் தந்தை யார் கண்ணையும் பிடுங்கி எறிவதில்லை."

பல் டாக்டர் பையனின் முகம் சிறுத்துப் போய்விட்டது.

### வளரும் பட்டியல்!

ஒரு மாநில அரசினர் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் கவனமா யிருந்தேன்.

பிற்பட்ட வகுப்பார் பற்றிய தொகுப்பு அது. பெயர்களையும் தந்திருந்தார்கள். அவர்கள் எல்லோரும் பிற்பட்ட வகுப்பினர்கள்தாம். வரிசை பெரிதாக இருந்தது.

நான்கைந்து ஆண்டுகள் முன் வெளியான பட்டியல் ஒன்று நினைவில் எழுந்தது. அதில் இவ்வளவு வகுப்பாரின் பெயர்கள் இல்லை. பிற்பட்ட வகுப்

பினர்களின் பெயர்களின் தொகுப்புத்தான் அதுவும். வெளியிட்டதும் இதே மாநில அரசினர் தான்.

நான்கைந்து ஆண்டுகளுக்குள் பிற்பட்ட இனத்தவர்களின் எண்ணிக்கை இவ்வளவு பெருகியுள்ளது என்று பொருள். இன்னும் சில ஆண்டுகள் கழிந்தால், பட்டியல் இன்னும் நீளமாகச் செல்லலாம். அதாவது வர வர நாமெல்லோரும் பின் தங்கியவர்களாகவே ஆகிக் கொண்டு வருவோம் என்று ஆகிறது.



நம் நாட்டை அந்தக் காலத்தில் ஆண்டு வந்தார்களே, வெள்ளையர்கள் அவர்கள் வந்து நமது இவ்வறிக்கைகளைப் பார்க்க வேண்டும். படித்து விட்டு வியப்புடன் நிச்சயம் கேட்பார்கள்: ''47-ம் ஆண்டில் நாங்கள் நாட்டை விட்டுச் சென்றபோது பிற்பட்டமக்கள் இருந்த எண்ணிக்கையை விட இன்று தொகை இவ்வளவு பெருகியிருக்கிறதே! நீங்கள் எல்லோரும் இந்த ஆட்சியில், நாளுக்கு நாள் பிற்போக்காக மாறி வருகிறீர்கள் என்று பொருளா?''

என்ன பதில் சொல்வது?

## மரக்கறியும் மாட்டுக்கறியும்

பெரியவர்களும் இப்படிப் பேசிக் கொள்ளலாம் — வேடிக்கைப் பேச்சுகள். தான் உயர்வு என்ற எண்ணம் இருக்கக் கூடாது. எதிரியை உள்ளன்போடு நேசிக்க வேண்டும். இரண்டும் இருப்பின், நட்போடு எவ்வளவு வேண்டுமானாலும் வாதாடலாம்.

இரு நண்பர்கள் உணவு வழியில் வேறுபட்டவர்கள். ஒருவர் மரக்கறி உண்பவர்; மற்றவர் மாமிச உணவு புசிப்பவர்.

''நான் சொல்கிறேனே என்று நினைத்துக் கொள்ளாதே. ஆட்டையும் மாட்டையும் கோழியையும் முட்டையையும் தின்னுவானேன்? ஆடும் மாடும் நம்மை என்ன தொந்தரவு செய்கின்றன? பாவம், ஏதோ அவைபாட்டில் இருக்கின்றன. தாம் உண்டு, தம் புல் உண்டு என்று இருக்கும் ஆடு மாடுகளைப் போய்க் கொன்று தின்னுவானேன்?'' பேசியவர் புல் பூண்டு தின்னுபவர்.



திகைப்போடு வினவினார் மற்றவர். ''பின்னே எதைத் தின்ன வேண்டும் என்கிறாய்?''

''சிங்கம், புலி, சிறுத்தை, கரடி... இப்படி எவ்வளவோ இல்லையா? அவற்றைப் பிடித்துக் கொன்று சாப்பிடக் கூடாதா? வீணில் ஒரு பாவமும் அறியாத ஆட்டையும் மாட்டையும் கொன்று குவிப்பானேன்? முரட்டு மிருகங்களை அடித்துச் சாப்பிட்டால் எவ்வளவு நல்லது!''

''ஓ! பேஷாகச் செய்யலாம். ஆனால்...'' சிறிது நேர யோசனை; பின்பு பதில்: ''நாங்கள் சிங்கம், சிறுத்தை இவைகளைத் தின்று நிச்சயம் வாழலாம்; சந்தேகமேயில்லை; எங்களைப் பொறுத்த வரை ஒருகவலையும் இல்லை. ஆனால் உங்களுடைய நல்வாழ்வை உத்தேசித்தே நாங்கள் ஆட்டையும் மாட்டையும் உண்ணுகிறோம். புரிகிறதா?''

''இல்லையே.''

''சொல்கிறேன் விளக்கமாய். உங்களுடைய ஆகாரமோ புல்லும் பூண்டும் தானே? அவற்றை ஆடு மாடு தின்று அழித்துக் கொண்டிருந்தால், உங்களுக்கெல்லாம் என்ன மிஞ்சியிருக்கும்? ஆகவே உங்களுடைய ஆகாரத்தைத் தின்று உங்களுக்கெல்லாம் போட்டியாக உயிர் வாழும் ஆடு மாடுகளை ஒழித்தால் தானே, உங்களுக்குக் காய்கறியும் செடி கொடியும் கிடைக்கும்? அந்தப் பணியைத்தான் நாங்கள் செய்கிறோம்.''

மரக்கறி நண்பர் சளைக்கவில்லை.

''மனமார்ந்த வந்தனம் தங்கள் அன்புப் பணிக்கு. ஆயினும் ஒரு கோரிக்கை.''

''தாராளமாக.''

''ஆட்டையும் மாட்டையும் ஒழிக்கிற கைங்கரியத்தை நீங்கள் எடுத்துக் கொண்டிருக்க வேண்டாமல்லவா.''

''பின்னே?''

''அந்தச் சிங்கமும் சிறுத்தையுமே ஆடு மாடுகளைத் தின்னுமே. நீங்கள் அந்தத் தொண்டைத் தலைமேல் ஏற்றுக் கொண்டிருக்க வேண்டாமே?

''நல்ல காலம். ஆடுமாடுகளுக்குக் கருணை காட்டி அவைகளுக்குப் போட்டியாக நாங்கள் இருக்கிறோம் என்று சொல்லி எங்களைச் சாப்பிடாமல் விட்டதற்கு நன்றி.''

## கடனுக்குள் கடனா?

எங்கள் குடும்பத்தில் முன்பொரு தரம் கடுமையான ஒருசோதனை தோன்றியது. உறுப்பினர் ஒருவர் நோய்வாய்ப் பட்டுத் தவித்தார். என் தாயார் துடித்துப் போனார். கடைசியில் நல்ல காலமாக நோயாளி உயிர் பெற்று எழுந்தார். எல்லாரும் புது வாழ்வு பெற்றாற்போல் மகிழ்ந்தோம்.

இடையில் அன்னை அவர்கள் வெளியிட்டார்கள் உள்ளத்திலிருந்த கோரிக்கையை. நோய் தீர்ந்தபின் திருப்பதி வேங்கடமுடையானை நேரில் சென்று, தரிசனம் செய்வதாக வேண்டிக் கொண்டிருந்தாராம். அந்த வேண்டுதலை நிறைவேற்ற வேண்டும் என்றார். தந்தை சரி என்று ஒப்புக் கொண்டார்.

யாத்திரைக்கு நாள் நிச்சயமாயிற்று. பெட்டி — சட்டி கட்டிக்கூட வைத்தாகி விட்டது. திடீரென்று அலுவலகத்து வேலையை ஒட்டிப் பிரயாணத்தைத் தள்ளிப் போட வேண்டி வந்தது. மூட்டையை யெல்லாம் பிரித்து, முடங்கி அமர்ந்தோம். என் தாய்க்குப் பெரும் வேதனை. பொறுமையோடு அடுத்த சந்தர்ப்பத்தை நாடி வேண்டித் தவம் கிடப்பது தவிர வேறு வழியில்லை.

அடுத்த ஆண்டு மீண்டும் யாத்திரைத் திட்டம் உருவாகியது. திடீரென்று சொல்லி வைத்தாற் போல், செய்தித் தாள்களில் ஓர் அறிவிப்பு. திருப்பதியிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் காலரா பரவியிருப்பதாகவும் யாரும் செல்ல வேண்டாம் என்றும் எச்சரிக்கை விடுத்திருந்தார்கள். எனவே பயணம் தள்ளி நின்றது.

இப்படியே மூன்றும் முறையும் ஏதோ காரணத்தினால் வேண்டுதல் முற்றுப் பெறாமல், குன்றி நின்றது. நான்கு ஆண்டுகளுக்குப் பின்பு ஆறஅமரச் சாவகாசமாக எப்போதோ வேண்டியதை எப்போதோ நிறைவேற்றி வைத்தோம்.

திருப்பதி சென்று எம்பெருமானைத் தரிசித்து விட்டுத் திரும்பிய பின்புதான், இடையில் நான்கு ஆண்டுகளாக மறைந்திருந்த மன நிறைவு அன்னையின் முகத்தில் மீண்டது.

திருப்பதி யாத்திரை முடிந்து, வீடு திரும்பி இரண்டு நாட்கள் கழித்து, அவரிடமிருந்து மெதுவாக ஒரு கோரிக்கை புறப்பட்டது. அதைக் கேட்டு விட்டுத் தான் எல்லாரும் ஒரு கணம் சிரித்து விட்டோம். பக்கத்துத் தெருவில் உள்ள பிள்ளையாருக்கு ஐந்து ரூபாய் செலவழித்து ஒரு சிறு அபிஷேகம் செய்விக்க வேண்டுமாம். இதுதான் அவ்வேண்டுதல். நான் கேட்டேன் — ''இது என்னம்மா 'கொசுறு' மாதிரிச் சின்னதாக ஒரு பிரார்த்தனையா?''

''இல்லை. ஒவ்வொரு தரமும் திருப்பதிப் பயணம் தட்டிக் கழிந்து கொண்டே வந்தது. அதனால்தான் மனத்துக்கு வேதனையாக இருந்தது. உடனே வேண்டிக் கொண்டேன், யாத்திரை கைகூடினால், நம் பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்வதாக.''

''அப்படியானால் திருப்பதி யாத்திரை போவதாக வேண்டிக் கொண்டிருந்திருக்க வேண்டாமே. இந்தப் பிள்ளையாருக்கே வேண்டுமானால் இன்னும் சேர்த்து வேறு ஏதாவது செய்வதாக வேண்டிக் கொண்டிருக்கலாமே?''

''அப்படியா? அவர் நம் குல தெய்வம் ஆயிற்றே. கண்கண்ட, வரப் பிரசாதம் தந்தருளுகிற தெய்வமில்லையா நம் வேங்கடாசலபதி?''

''நியாயம் பேசாமல், இந்தக் கொசுறுப் பிரார்த்தனையையும் அவருக்கே செய்திருக்கலாமே.'திருப்பதிக்கு என்னை அழைத்துக் கொள். உன் உண்டியில் ஐந்து ரூபாய் போடுகிறேன்'என்று ஏதாவது வேண்டிக் கொண்டிருக்கலாமே?''

''அதெப்படி முடியும்? கடனுக்குள்ளேயே கடன் சொல்வதா? அவரது தரிசனமே நடைபெறாமல் நிற்கிறபோது, வந்தால் ஐந்து ரூபாய் போடுகிறேன் என்றால் என்ன இருக்கிறது? அதனால்தான் பக்கத்தில் இருக்கிற உள்ளூர்த் தெய்வமாகப் பார்த்து வேண்டிக் கொண்டேன் இப்படி.''

என் தந்தை கேட்டுக் கொண்டே வந்தார். ''இந்த அபிஷேகம் நடந்தால், வேறு எந்தத் தெய்வத்துக்காவது ஏதும் செய்ய வேண்டுமா? அதையும் இப்போதே சொல்லிவிடு. கூட்டு வட்டி மாதிரி குட்டி போட்டுக்கொண்டே....''

பக்தித் தத்துவமே தனி. நம்பிக்கை என்ற ஒரே உயிர்ப் பொருளின் வலிமையில் இயங்குவது அது. மேற்கண்ட வாத விவாதங்களுக்கும் தர்க்கங்களுக்கும் அதில் இடம் இல்லை. திருப்பதிப் பயணத்தை நடத்தி வைத்தவர் பக்கத்துத் தெருப் பிள்ளையார்தானா? அப்படியானால், அவர் திருவேங்கடமுடையானைவிடப் பெரிய பேர்வழியாக இருப்பார் போல் இருக்கிறதே?

இத்தகைய கேள்விகள் எழுந்தால், அவை தாமாக நீர்க்குமிழிகள் போல் உடைந்து மறைய வேண்டியதுதான்!




## 11. செல்வியின் கலியாணம்

திவான்பகதூர் செந்தில் நாயகம் அவர்கள் சொன்னது உண்மையாகப் போயிற்று. வல்லாள வேலர் வீட்டில் இருந்த மற்றொரு கைத் துப்பாக்கியை வேணுலிங்கம் பறித்துக் கொள்ளாமல் விடமாட்டான் என்று எச்சரிக்கை சொன்னார் அல்லவா? அந்த எச்சரிக்கையின் படியேதான் நடந்தது!

வேணுலிங்கம் அனுப்பிய கடிதத்தை வாங்கி வல்லாளவேலரிடம் கொடுக்கும் போதே, திவான்பகதூருக்கு அதில் என்ன எழுதியிருந்தது என்பதை ஊகிக்க முடிந்தது. அப்போது வல்லாளர் சொன்னார்:

"வக்கீலையா, என்னிடத்திலே கொடுக்கணுமா அதை! நீங்களே படிச்சுப் பாருங்க!"

வக்கீல் அந்தக் கடிதத்தை உரக்கவே படித்தார்:

முருகபாண்டிபுரத்தின் முடிசூடா மன்னராகிய வல்லாளவேலச் சக்கரவர்த்திக்கு வேணுலிங்கம் தண்டனிட்டு எழுதுவது என்னவென்றால்,

இப்பவும் இவ்விடம் நலம். அவ்விடம் நலத்தையே விரும்புகிறேன்.

அவ்விடத்து நலத்தை நான் விரும்புகிற காரணத்தால்தான் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். எஜமானுக்கு இத்தனை ஞாபக மறதி இருப்பது நல்லதில்லை. எத்தனையோ வரவு செலவுகளையும் கணக்குகளையும் நிர்வாகம் பண்ண வேண்டிய எஜமான் இப்படி ஞாபக மறதியோடு இருந்தால் அது எஜமானுடைய உடம்புக்கு நல்லதா?

தங்களுடைய கைத் துப்பாக்கி என்று நினைத்து, ஏலமலைக் கைத் துப்பாக்கியை எடுத்துக் கொடுத்து விட்டீர்களே! இந்த ஞாபக மறதியினால் எஜமானுக்கு எப்படியானாலும், இந்த வேணுலிங்கத்துக்குப் பெரிய நன்மையாகவே ஆயிற்று. ஏலமலைக்கு நான் ஒரு நடை போவது மிச்சமாயிற்று. இன்றிரவு எஜமானுடைய கைத் துப்பாக்கியை எடுத்துக் கொள்ளுகிறேன். எஜமான் ஊரில் இல்லாத காரணத்தால், நான் போவதற்குப் பதிலாக நம்முடைய மாப்பிள்ளை கடலையாண்டியை அனுப்பியிருக்கிறேன். அவன் எஜமானுடைய வீட்டுக்குப் போகும்போது, எஜமான் அங்கே இல்லாமல் போனதுபற்றி வருத்தப்படாதீர்கள். கடலையாண்டி அங்கே விருந்து சாப்பிடவா போகிறான்? இல்லையே. அலமாரியிலுள்ள கைத் துப்பாக்கியை மட்டும் எடுத்துக் கொண்டு வந்துவிடுவான்.

இப்படிக்கு,
வேணுலிங்கம்

பின்குறிப்பு: எஜமானுடைய ஞாபக மறதிக்கு ஜமீன் ஆஸ்தான வைத்தியரிடமே நல்ல மருந்தாக வாங்கிச் சாப்பிடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். ஏனென்றால் எதிர்காலத்தில் இந்த வியாதி இப்படியே நீடித்தால் அது எஜமானுக்கு மட்டும் அல்லாமல், ஜமீனுக்கே கெடுதல். அத்தனை வரவு செலவுள்ள ஜமீனானதால் இந்த யோசனையைச் சொன்னேன்.

வேணு

இந்தக் கடிதத்தைத் திவான்பகதூர் படித்து முடித்ததும் வல்லாளவேலருக்கு மீசை துடி துடித்தது.

"என்ன வக்கீலையா! என் உடம்புக்கு இந்தப் பயல் மருந்து சொல்கிறானாமே! எப்படி இருக்கிறது பாருங்களேன்!"

"அப்படி இல்லை, வல்லாளவேலரே! நம்முடைய உடம்பு பத்திரமாக இருக்க வேண்டும் என்று —"

"என்ன வக்கீலையா! என்ன சொல்லுகிறீர்கள்? 'உடம்பு பத்திரம்' என்று இந்தப் பயல் எனக்கு எச்சரிக்கை சொல்

கிருனு? அதையா இப்படி எகத்தாள மாக எழுதியிருக்கிருன்!''

வல்லாளவேலரின் கண்கள் சிவந்தன. அந்தக் கோபத்துக்குள்ளேயே, பின்னணியில், ஒரு வித அச்சமும் படர்ந்தது.

''வல்லாளரே! இப்பொழுது நம்முடைய ஜமீன் வட்டங்களில் யாரும் இந்த வேணுலிங்கத்தை அசைக்க முடியாது! அவனுடைய கோட்டை அத்தனை பலமாக இருக்கிறது. அவன் சொல்வதைக் கேட்டுக் கொள்வதைத் தவிர, நாமாக எதையும் செய்ய முடியாத நிலைமை!''

திவான்பகதூர் இப்படிச் சொன்னார். சொல்லி விட்டு வல்லாளவேலரின் முகத்தையே பார்த்தார்.

''வக்கீலையா! அவன் சொல்வதைக் கேட்க வேண்டும் என்ருல், நான் மருந்து சாப்பிட வேண்டும் என்று சொல்வீர்கள் போலிருக்கிறதே!''

''இல்லே, இல்லே! அதற்குச் சொல்ல வில்லே. அவனிடம் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதற்குச் சொல்கிறேன்!''

''சரிதான். வக்கீலையா, நீங்களே ஆட்களை இப்படிப் பயப்படுத்திளுல் எப்படி?''

''பயப்படுத்த வில்லே ஐயா. எப்பவுமே ஒரு விஷயம் சொல்லுகிறேன் கேளுங்கள்:

**துட்டரைக் கண்டதும் தூர விலகாதார்**
**கட்டப் படுவார் கடிது!''**

இப்படி ஒரு குறளைப் போட்டு விட்டதும்தான் வல்லாள வேலருக்கு ஒரு சமாதானம் ஏற்பட்டது!

ஆனாலும் அவருடைய மனத்தில் எழுந்த சில அடிப்படையான சந்தேகங்கள் மேலும் மேலும் குழப்பிக் கொண்டுதான் இருந்தன! தாம் வண்ணூர்ப் பேட்டைக்கு வந்தது அந்த வேணுலிங்கத்துக்கு எப்படித் தெரிந்தது? இந்தக் கடிதத்தை எப்படி அவன் அனுப்பி வைத்தான்? சுடலையாண்டியை முருக பாண்டி புரத்துக்கு அனுப்பிவிட்டு, இவன் ஒரு வேளை வண்ணூர்பேட்டைக்கே வந்து விட்டாளு? அப்படியானுல் இந்த வேணுலிங்கத்துக்கு இவ்வூரில் சில பெரிய மனிதர்கள் உடந்தையாக இருக்கிருர்களா? ஒரு வேளை நம்முடைய வக்கீலேயாவே இந்தக் கொள்ளைக்காரனுக்கு உதவிகள் செய்கிருரோ? 'இன்றிரவு ஊருக்குத் திரும்பிப் போக முடியாதபடி இங்கே இழுத்துக்கொண்டு வந்து விட்டு விட்டாரே இந்தவக்கீல்! அப்படியானுல்?

வல்லாளவேலர் யோசனை செய்தார்.

'இன்றிரவே முருகபாண்டிபுரத்துக்குத் திரும்பிச் சென்று விட்டால் என்ன? ஆனுல் எப்படிப் போவது? காரிலே போவதானுலும் கூட இருட்டிலே கொள்ளைக்காரர்களுக்குப் பயப்படாத ஒரு டிரைவரைப் பிடித்துக் காரை ஓட்டச் சொல்ல வேண்டுமே! அப்படியே போனுலும் இந்த வேணுலிங்கம் வழியிலே வந்து பிடித்துக் கொள்ள மாட்டான் என்பது என்ன நிச்சயம்? தம்மைத் தேடிப் பிடித்து வக்கீலின் வீட்டுக்கே கடிதம் எழுதியனுப்பக் கூடிய ஒரு பயல், வேறு என்னதான் செய்ய மாட்டான்?'

இப்படி யெல்லாம் யோசித்தவராக, வல்லாளவேலர் அன்றிரவு தமது கிராமத்துக்குப் போக வில்லே. மறுநாள் விடியற்காலே முதலாவது ரயில் வண்டியிலே நேரே செங்கோட்டைக்கு வந்து, அங்கிருந்து முருகபாண்டிபுரம் போய்ச் சேரும்போது மத்தியான நேரம் ஆகிவிட்டது! வீட்டுக்குள்ளே நுழைந்தால் அங்கே எவ்வித குழப்பமும் இல்லே! நேரே அலமாரி இருந்த அறைக்கு வந்து தான் மனைவியிடம் பேச ஆரம்பித்தார்! பேசிக் கொண்டே அவர் அலமாரியைத் திறந்தார்.

''அலமாரியில் என்ன பார்க்கிறீங்க இத்தனை அவசரமா?'' என்று கேட்டாள் மனைவி.

''ரிவால்வரைத்தான்!'' என்ருர் வல்லாளவேலர்.

''கைத் துப்பாக்கியைக் கொடுத்து விடும்படி ஆளை அனுப்பிச்சுட்டு, இப்ப இப்படிக் கேட்கிறீங்களே என்ன?'' என்று திகைப்போடு சொன்னுள் வல்லாள வேலரின் மனைவி.




''கொடுத்து விடும்படி சொன்னேனு? நானு? நடுச் சாமத்திலேயா?''

''நடுச்சாமமா? சாயந்திரம் நாலு மணியா நடுச் சாமம்?''

''சாயந்தரமா? நாலு மணிக்கா சுடலையாண்டி இங்கே வந்தான்?'' என்று ஒரே திகைப்போடு கேட்டார் வல்லாளர்.

''சுடலையாண்டியா? அவன் வர லேயே!'' என்று சொல்லும்போதே வல்லாளரின் மனைவிக்கு உடம்பு பதறியது!

''சுடலையாண்டியா அது! யாரோ போலீஸ்காரருல்லே வந்து வாங்கிகிட்



டுப் போனாரு. நீங்க வக்கீலையா விட்டி விருந்துக் கிட்டுக் கேட்டு' விட்டீங்கன்னு சொன்னாரு. அலமாரியிலே இருக்கிற கைத் துப்பாக்கியை அடையாளம் சொன்னாரு. திருட்டுப் பய கொண்டு போன கைத்துப்பாக்கிக்குப் பக்கத்திலே இருக்கிற இன்னொரு கைத் துப்பாக்கின்னு அடையாளம் சொன்னாரே அந்தப் போலீஸ்காரரு!''

வல்லாள வேலருக்கு இப்பொழுது புரிந்து விட்டது! சுடலையாண்டியே போலீஸ் உடை அணிந்து கொண்டு வந்திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டார். மனைவியிடம் அதிகமாக இது பற்றிச் சர்ச்சை செய்ய விரும்பாமல் திண்ணைக்கு வந்து யோசிக்கத் தொடங்கினார்.

'சுடலையாண்டி மாறு வேடத்தில் வந்து கைத் துப்பாக்கியைக் கொண்டு போய் விட்டான்! பகல் நேரத்திலே தைரியமாக வருவதற்கு இப்படி ஒரு வழியைக் கண்டு பிடித்து விட்டானே!' என்று யோசிக்கும்போதே வீட்டுக்கு வெளியே குதிரையின் குளம்போசை 'பட் பட்' என்று கேட்டது. அந்த ஓசையிலிருந்தே அது ஏலமலைக் குதிரைதான் என்பதை ஊகித்து விட்டார் வல்லாளவேலர்.

''ஏய்! ஏய்!'' என்று தமது மனைவியை 'ஏய்' போட்டுக் கூப்பிட்டுக் கொண்டே வல்லாளர் வாசற்படிக்கு வந்தார். அவருடைய மனைவியும் வேகமாக வந்து பொன்னுத்துரையை வரவேற்றாள். துரையைக் கண்டதும், அவளுடைய முகத்தில் எல்லையற்ற மகிழ்ச்சி தாண்டவமாடியது!

''முந்திரிக் கொத்து பண்ணி இரண்டு நாளாகுது. துரையைக் காணமேன்னு நினைச்சுக்கிட்டே இருந்தேன்!'' என்றாள் வல்லாளர் மனைவி.

''சித்தி! நீ பண்ணின முந்திரிக் கொத்து ஏலமலை வரைக்கும் வாசனை அடிச்சுது! நேத்தே வந்திருப்பேன். ஆனாலும் ரெண்டு நாள் ஆறிச் சாப்பிட்டாத் தானே முந்திரிக் கொத்து ருசிக்கும்! அதனாலேதான் இப்ப வந்தேன்!''

''தம்பீ! எவ்வளவு அருமையாச் சொல்லிப் போட்டீக! முந்திரிக்கொத்து சுசியம் இந்த இரண்டும் இரண்டு விதமான ருசி! பண்ணின உடனே சாப்பிட்டாத்தான் சுசியத்துக்கு ருசி. ஆனா முந்திரிக் கொத்து மட்டும், நாளாக நாளாகத்தான் ருசி! இதையெல்லாம் தெரிஞ்சுதானே நம்ப பெரியவுக முறுக்கும் முந்திரிக்கொத்தும் கண்டுபிடிச்சாக! மாசக்கணக்கா இருக்குமே கெட்டுப் போகாமல்!'' என்றார் வல்லாளர்!

'முந்திரிக் கொத்து' என்று அழைக்கப்படுகிற அந்த நேர்த்தியான தின்பண்டத்தைப் பற்றிய சர்ச்சை இப்படியாக நடந்து கொண்டிருக்கும்போதே, வல்லாளவேலரின் மனைவி ஒரு பெரிய தட்டில் முந்திரிக் கொத்தும் முறுக்கும் எடுத்துக் கொண்டு வைத்தாள்.

''சித்தி! அப்படியே கொஞ்சம் தேங்காய்த் திருகலும் கொண்டு வா! முறுக்கு சாப்பிடும்போதே ஊடே ஊடே தேங்காய்த் திருகலும் கொஞ்சம் எடுத்து வாயிலே போட்டா, அந்த ருசியே தனிதான்!''

சாப்பிட்டுக் கொண்டே இருவரும் முக்கியமான விஷயத்துக்கு வந்தார்கள். வல்லாளவேலர் துப்பாக்கிகளின் வரலாற்றைச் சொன்னார்.

''சித்தப்பா! இந்த வேணுலிங்கம் போன மாசம் வரைக்கும் நம்முடைய திசைப்பக்கமே தலைகாட்டாமல் இருந்தான். இப்பத்தான் திடீர் என்று இப்படி ஆரம்பித்திருக்கிறான்! அது ஏன் அப்படி?''

இவ்வாறு கேட்டான் பொன்னுத்துரை. வல்லாளவேலர் மௌனமாக இருந்து யோசனை செய்தார்.

''தம்பீ! நீங்கள் சொல்லுகிறதும் ஒரு முக்கியமான பாயிண்டுதான்! நானும் இதைப் பற்றி யோசிக்காமல் இல்லை. ஆனால் காரணம் விளங்கவில்லை. திடீர் என்று நம்முடைய கைத் துப்பாக்கிகளிடத்தில் இவனுக்கு என்ன அக்கறை வந்தது! கைத்துப்பாக்கி வேண்டுமானால், அவனுக்கு இந்த வட்டாரத்தில் எத்தனை பண்ணையார்கள், ஜமீந்தார்கள் இருக்கிறார்கள் இரவல் கொடுப்பதற்கு! அப்படியிருந்தும் நம்முடைய கைத் துப்பாக்கியை ஏன் குறிபார்த்தான் அவன்?''

''இரண்டு கைத் துப்பாக்கிகளையும் அல்லவா கொண்டு போய் விட்டான்!'' என்று மிகுந்த கவலையோடு சொன்னான் பொன்னுத்துரை.

''தம்பீ! கைத் துப்பாக்கி போய் விட்டதே என்று இப்பொழுது கவலைப்

பட்டுப் பலன் இல்லை. நீங்களும் நானும் நினைத்தால் கைத் துப்பாக்கிக்கா பஞ்சம்! அது கிடக்கட்டும். ஆனால் இந்தச் சிங்கம்புத்தூர் நிலைமை இவ்வளவு விபரீதமாகப் போக வேண்டுமா என்றுதான் கவலைப் படுகிறேன்!''

இப்படிக் கூறினார் வல்லாளவேலர்.

''சித்தப்பா! ஒன்று நிச்சயமாகச் சொல்லுகிறேன். அனவரத மாமா மனசு நமக்குத் தெரிந்ததுதான். விநாடிக்கு விநாடி மாறக்கூடிய மனசு அது! அதுக்கு நிலை கிடையாது! திடீரென்று அந்த வில்வநாதனையே வீட்டை விட்டு விரட்டியடித்தாலும் நான் ஆச்சரியப் பட மாட்டேன்! என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்?''

இப்படிக் கேட்டான் பொன்னுத்துரை!

''மெய்யான பேச்சு, தம்பி! ஒருவரைப் பிடித்து விட்டால் தலையிலே தூக்கி வைத்துக் கூத்தாடுவார்கள். பிடிக்கவில்லையோ, தரையிலே போட்டுக் காலால் துவைத்து மெழுகினால் தான் தூக்கம் வரும்! அதுதான் இந்த வட்டாரம் முழுதும் தெரிந்த செய்தி ஆயிற்றே! ஆனாலும் இன்று அந்தப் பையன் ஜமீந்தாரின் தலைக்கு மேலே தானே உட்கார்ந்து கொண்டிருக்கிறான்! அவனைக் கீழே இறக்குவது எப்படி? அதைத்தான் நான் யோசிக்கிறேன்! புரிகிறதா ?''

வல்லாளவேலர் இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்டே மீசைகளின் இரண்டு நுனிகளையும் கூர்மையாக முறுக்கி விட்டார்.

''சித்தப்பா! சிங்கம்புத்தூர் மாமா இருக்கட்டும்! செல்வி சம்பந்தப்பட்ட வரை எனக்கு நிச்சயமாகத் தெரியும்! அவள் ஒரு நாளும் மனசு மாற மாட்டாள்....''

பொன்னுத்துரை மட்டற்ற பிரியமும் உறுதியும் கலந்த குரலிலே இப்படிச் சொன்னான்.

''தம்பி! என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்! ஆயிரம் ஆனாலும் சிறு பிள்ளை சிறு பிள்ளைதான் நீங்கள்! உலக அனுபவம் போதாது உங்களுக்கு! ஒரு வயதுப் பெண்ணும் ஒரு வாலிபப் பிள்ளையும் இவ்வளவு நெருங்கிப் பழகினால் என்ன நடக்கும் என்று ஊகித்துப் பார்க்க வேண்டாமா? பஞ்சும் நெருப்பும் ஒன்றாக இருந்தால் என்ன ஆகும்? சொல்லுங்கள் நீங்கள்!''

''சித்தப்பா! அதெல்லாம் சரி. என்றாலும் தாமரைச் செல்விக்கு என்னிடத்தில் உள்ள அன்பு—''

''அதெல்லாம் சரி, தம்பி! அத்தை மகன் என்று ஒரு பிரியம் இருக்கும். இல்லை என்று நான் சொல்லவில்லை. ஆனாலும், சித்திரம் எழுதுகிறேன், கத்திரிக்காய் எழுதுகிறேன் என்று, ஒரு வாலிபப் பையனிடம் பழக ஆரம்பித்து விட்டாள், பிறகு அது எங்கே போய் நிற்கும்? அந்தப் பையனோ பட்டு மெத்தையில் பஞ்சு அடைத்தது போல் இருக்கிறான். உங்கள் மாமா பெண்ணோ, சொல்ல வேண்டியதே இல்லை. தீபச் சுடர்மாதிரி! இந்தச் சுடரும் அந்தப் பஞ்சும்—''

பொன்னுத்துரைக்குச் 'சுரீர்' என்று, இதயத்தில் பொறி விழுந்ததுபோல் இருந்தது. தட்டிலிருந்த முந்திரிக் கொத்தையும் முறுக்கையும் அப்படியே வைத்து விட்டு எழுந்தான்.

''சித்தப்பா! இப்படியே குதிரையை ஒரு சுண்டுச் சுண்டுகிறேன். நேரே சிங்கம்புத்தூர்! நேரே மாமாவிடம் போக வேண்டியது. இரண்டில் ஒன்று! என்ன சொல்லுகிறீர்கள்?''

''தம்பி! உட்காருங்கள். இளங் கன்று பயம் அறியாது என்பது சரியாகத்தான் இருக்கிறது!''

இவ்வாறு சொல்லிப் பொன்னுத் துரையைக் கையமர்த்தினார் வல்லாள வேலர்.

''தம்பி! ஆத்திரப்படாமல் மிகவும் நிதானமாகச் செய்ய வேண்டிய காரியம் இது! ஜமீந்தார் மாமாவிடம் நீங்கள் இப்பொழுது போய் இரண்டில் ஒன்று என்று கேட்டால், என்ன ஆகும்? மறு விநாடியே அந்தப் பையனைக் கூப்பிட்டு மகளை அவனுடைய கையிலே பிடித்துக் கொடுத்து விட்டுத்தான் மேற்கொண்டு பேச்சு நடக்கும்!- சிங்கம்புத்தூர் நிலைமையை நன்றாகத்









பம்பாய் மத்திய ரயில்வே திரு பி. ஆர். சுந்தரராஜ அய்யங்காரின் புதல்வி செள. சாந்தாவுக்கும், திரு சீனிவாசராகவனுக்கும் விவாகம் விமரிசையாக நடந்தது.

பாரத் ஷிப்பிங் ஏஜன்ஸி கம்பெனி டைரக்டர் திரு வி. ராமானுஜம் அவர்களின் புதல்வி மைதிலிக்கும், திரு சேஷாத்திரிக்கும் கல்யாணம் சிறப்பாக நடந்தது.

திரு ஆர். ராமகிருஷ்ண அவர்களுக்கும், செளபாக்கியவதி வஸந்திக்கும் சமீபத்தில் சென்னையில் அதி விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

---

தெரிந்திருந்தும் இப்படி ஆத்திரப்படலாமா! உட்காருங்கள். நான் ஒரு கட்டை அந்த அரமனையில் இருக்கிறவரை நீங்கள் ஏன் இப்படி ஆத்திரப்பட வேண்டும்? இந்த வல்லாளனையும் மீறி அப்படி ஒரு காரியம் நடக்குமா என்று பார்த்து விடுகிறேன். நான் தான் உங்களுக்குச் சொல்லியிருக்கிறேனே. ஞாபகம் இல்லையா?''

இப்படிக் கேட்டார் வல்லாளவேலர். பொன்னுத்துரை இதுவரை ஆத்திரமும் படபடப்புமாக முனைந்து நின்றவன், இப்பொழுது மௌனமாக உட்கார்ந்து விட்டான். முகத்தில் கவலை படர்ந்தது. பேச்சு வரவில்லை!

''தம்பி! போன இருவிழாவிலே செண்பகநாயகி கோவிலில் வைத்து என்ன சொன்னேன் உங்களிடம்! தம்பீ, என்ன இப்படிக் கவலையோடு உட்கார்ந்து விட்டீர்கள்! நினைவு வருகிறதா நான் சொன்னது?'' என்று கேட்டார் வல்லாளர்.

பொன்னுத்துரை பதில் பேசவில்லை. மௌனமாகவே இருந்தான்.

''தம்பி! அடுத்த ஆண்டுத் திருவிழாவின்போது அந்தக் கோவிலுக்கு நீங்கள் தனியாகப் போக மாட்டீர்கள், தம்பதி சமேதராகப் போவீர்கள் என்று சத்தியம் சொன்னேனே ஞாபகமில்லையா? தம்பீ, அடுத்த திருவிழாவுக்கு நீங்களும் உங்கள் மாமா மகளும்—''

''சித்தப்பா-'' என்றான் பொன்னுத்துரை! அவனுடைய கண்கள் கலங்கி நின்றன.

''சித்தப்பா-'' என்றான் இரண்டாம் முறை. இப்பொழுது அந்தக் கண்களிலே கண்ணீர் துளித்தது.

''சித்தப்பா! அப்படியானால் அந்தப் பையனுக்கும் செல்விக்கும் கலியாணம் நிச்சயம் ஆகிவிடும் என்கிறீர்களா?'' என்று கேட்கும்போதே, முந்திரிக் கொத்தும் முறுக்கும் வைத்திருந்த தட்டிலே 'பொல பொல' என்று கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன.

''தம்பி! தம்பி! என்ன இது! அடாடா! இப்படியா மனசைத் தளர விடுவார்கள்! அட பிள்ளையே! என்ன இருந்தாலும் சிறு பிள்ளை என்பது சரியாகத்தான் இருக்கிறது! தம்பி, தம்பி! எப்பேர்ப்பட்ட வீராதி வீரனும் பெண்கள் விஷயத்தில்—''

வல்லாளவேலர் பொன்னுத்துரைக்கு அருகிலே வந்து தமது மேல் துண்டை எடுத்துக் கண்களைத் துடைக்கப் போனார். அப்பொழுதுதான் பொன்னுத்துரைக்குத் தனது நிலைமை புரிந்தது. தானே தனது கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான்.

''ஒன்றுமில்லை, சித்தப்பா! அப்படியே செல்வியை நினைத்ததும், மனசு எங்கெங்கோ போயிற்று! சிறுபிள்ளையைப்போல் அசட்டுத்தனமாகக் கலங்கி விட்டேன். இப்பொழுது ஒன்றுமில்லை. நீங்கள் மேலே சொல்லுங்கள்! என்ன சொன்னீர்கள். அந்தப் பையனைப் பற்றி என்னவோ, சொன்னீர்களே. சொல்லுங்கள்!''

வல்லாளவேலர் சற்று நேரம் மௌனமாக இருந்தார். பிறகு சொன்னார்:

''தம்பி! போன வருஷம் நான் செண்பகநாயகி கோவிலிலே சொன்னதையேதான் இப்பொழுதும் சொல்லுகிறேன். இந்த அண்டமே இடிந்து விழுந்தாலும் ஒரு கை பார்த்து விடுகிறேன். இந்த விஷயத்தில் தூக்கு மேடையோ, சிறைச்சாலையோ எது வந்தாலும் சரி. நான் விடப் போவ

இல்லை. இது உறுதி. இதற்காக நீங்கள் சிறு பிள்ளையைப் போல இப்படிக் கலங்கலாமா?''

பொன்னுத்துரை தனது முகத்தில் இருந்த கலக்கத்தைத் துடைத்து விட்டுக் கொண்டான்.

''சித்தப்பா! தூக்கு மேடை, சிறைச்சாலை என்றெல்லாம் அவ்வளவு பெரிய வார்த்தைகளைச் சொல்ல வேண்டுமா நீங்கள்? வேணுலிங்கம் மாதிரி ஒருத்தனிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைத்து விட்டால் போதாதா? நாமே இறங்கி வேலை செய்ய வேண்டுமா என்ன? யாரை என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுகிறோமோ அப்படிச் செய்து விட மாட்டானா அவன்?''

''தம்பி! வேணுலிங்கத்தைப் பற்றி ஏன் திடீரென்று இப்பொழுது நினைக்கிறீர்கள்? எனக்கு வருகிற கோபத்தில் அந்தப் பயலையும் சேர்த்து—''

''சித்தப்பா! என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்?''

''தம்பி! கொள்ளையடிப்பதற்கு என்று எப்பொழுது புறப்பட்டு விட்டானோ, அவனை நம்பலாமா? அவனை நம்பி இப்படிப்பட்ட ஒரு பொறுப்பை ஒப்படைக்கலாமா? சிறுபிள்ளைத்தனமாகச் சொல்லுகிறீர்களே!''

''சித்தப்பா! இந்தத் துப்பாக்கி விஷயத்தில்தான் அவன் இப்படி நடந்து கொண்டு விட்டானே தவிர, மற்றப்படி ஏலமலைக்கு அவன் விரோதியா என்ன? அப்பா காலத்தில் இந்தமாதிரி இரண்டொரு கொள்ளைக் காரர்களைக் கையாளாகவே வைத்திருந்தார்கள். காதும் காதும் வைத்தாற்போல் எத்தனையோ காரியங்கள் நடந்திருக்கின்றன. அதனால் தான் சொன்னேன்—''

''தம்பி! அதெல்லாம் சரி. ஆனால் இந்த வேணுலிங்கம் யாரென்று நமக்கு இன்னும் இனம் பிடிபடவில்லை! வண்ணார்பேட்டை வக்கீலையாவோ என்னென்னவோ புதிர் போடுகிறார் இந்தப் பயலைப் பற்றி! அவனோ எடுத்த எடுப்பில் நமக்குப் போட்டியாக நம்முடைய துப்பாக்கிகளிலே கண் வைத்து விட்டான்! இந்த நிலைமையில் அவனையே நமக்கு உதவி கேட்க வேண்டும் என்று சொல்லுகிறீர்களே! அதெல்லாம் தப்பு! நீங்கள் ஏதேதோ குழம்புகிறீர்கள். அதனால்தான் இப்படியெல்லாம் குழப்பமாக யோசனை செய்கிறீர்கள். இந்த ஏற்பாடெல்லாம் உங்களுக்கு எதற்கு? அந்தக் கவலையையெல்லாம் மறந்து, நீங்கள் வழக்கம்போல் சிங்கம்புத்தூருக்கு வந்து போய் இருங்கள். அதிக நெருக்கம் வேண்டாம்! ஏனோதானோ என்று இருங்கள்! மற்றக் கவலை எல்லாம் எனக்கு! நான் பார்த்துக் கொள்ளுகிறேன்!''



லெப்டினன்ட் கர்னல் திரு எஸ். கோபாலகிருஷ்ணன் அவர்களின் புதல்வி குமாரி பானுவின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் பம்பாயில் நடந்தேறியது.

இப்படி வல்லாளவேலர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, வீட்டுக்குள்ளே இருந்த மனைவி வெளியே வந்தாள்.

''என்ன இது! முந்திரிக் கொத்தும் முறுக்கும் அப்படியே இருக்கு! உங்க சித்தப்பாவுக்குப் பேச்சுன்னாபோதுமே. பேச ஆரம்பிச்சுட்டாகன்னா, எதிரிலேயிருக்கிறதுகளையும் அவுக சாப்பிட விட மாட்டாக!''

இப்படி ஒரு போடு போட்டாள் மனைவி. வல்லாளவேலர் சிரித்துக் கொண்டே பொன்னுத்துரையைப் பார்த்து, ''தம்பி! நீங்க சாப்பிடுங்க!'' என்று கூறினார்.

பொன்னுத்துரை ஏலமலைக்குப் புறப்பட்டுச் சென்ற பிறகு, வல்லாளவேலர் தமது மனைவியிடம் சமாதானம் சொல்லலானார். முந்திரிக்கொத்தும் முறுக்கும் சாப்பிடும்போது பொன்னுத்துரையின் மனம் அப்படிக் கலங்கும் படியாக என்ன நடந்தது என்று நுட்பங்களை விளக்கினார்! எந்தச் சமா

சாரத்தையும் மனைவியிடம் சொல்லி அவளுடைய அங்கீகாரத்தை வாங்கினால் ஒழிய அவருக்குத் திருப்தி ஏற்படாது!

''முந்திரிக் கொத்தையும் முறுக்கையும் சாப்பிட்டுக்கிட்டு இருந்தாப் போதுமா? காத்திருந்தவன் பெண்ணை நேத்து வந்தவன் கொண்டு போருன் என்கிற கதையால்லே முடிஞ்சிடும்!''

இவ்வாறு சொல்லித் தமது மனைவியின் ஆமோதிப்பை நாடி ஒரு புன் சிரிப்புச் சிரித்தார் வல்லாளவேலர்!

''அதெல்லாம் நடக்காது. ஆமா!'' என்று ஒரு செம்போடாகப் போட்டாள் அந்த அம்மணி!

''எது நடக்காது? கல்யாணமா?'' என்று கவலையோடுகேட்டார்வல்லாளர்.

''எண்ணைக்கு அந்தச் செல்வி இந்தப் பூமியிலே பிறந்தாளோ, அண்ணைக்கே அவளுக்கு மாப்பிளே பொன்னுத்துரை தான்னு எழுதியாச்சு! ஆமா!''என்ருள் வல்லாளர் வீட்டு அம்மாள்.

''ஏய்! என்னமோ சொல்லுறியே நீயி! நான் என்ன சொல்லிக்கிட்டிருக்கேன், நடப்பு என்ன, என்ன சமாச்சாரம், அப்படீண்ணு எல்லாம் யோசியாமே நீ பாட்டுக்கு என்னவோ சொல்லிக்கிட்டே போறியே!''

இப்படி இழுத்தார் வல்லாளர். இடி இடித்ததுபோல் பதில் வந்தது.

''இந்த ஆம்புளேகளுக்கே புத்தி கொஞ்சம் கட்டைதான்! ஆமா!'' என்ருள் அவள்!

வல்லாளவேலர் ஆடவர் குலத்தின் ஏகப் பிரதிநிதியாக ஒரு புன்முறுவல் பூத்தார். பிறகு கேட்டார்:

''பிச்சம்மா! நீ என்ன சொல்லுதே! கொஞ்சம் தெளிவாத்தான் சொல்லேன்...!''

''சொன்னேன் சோத்துக்கு உப்பு இல்லேண்ணு!'' என்று சொல்லி முகத்தைத் திருப்பித் தோளிலே கொண்டு ஒரு மடக்கு மடக்கினுள். அடுத்த விஞடி சொன்னுள்:

''துரைதான் சிறு பிள்ளே,. உலக நடப்புத் தெரியாமப் பேசுது. உங்களுக்குப் புத்தி எங்கே போச்சுண்ணு தெரியலேயே! இந்தச் சிங்கம்புத்தூர்ப் பெண்ணை எங்கேயோ பட்டணத்திலேருந்து வந்த ஒருத்தன் கலியாணம் பண்ணிக்கிடப் போருனுமில்லே! ஆலிலே புளியிலே மாதிரி வேலியிலே படர்ந்திருக்குமுண்ணு, யாரோ சொன்னுளுமே அப்படி யிருக்கு உங்க பேச்சு!''

இப்படி ஒரு மேற்கோள் சொல்லித் தமது மனைவி அந்தப் பேச்சில் ஒரு தீர்மானம் கொடுத்ததும், வல்லாளவேலருக்கு ஆவலும் குழப்பமும் அதிகரித்தன.

''பிச்சி! அப்படிண்ணு, நம்ப பொன்னுத்துரைக்கும் செல்விக்கும்நிச்சயமாகக் கலியாணம் நடக்கும்னு சொல்லுதே!''

''அதிலேயும் சந்தேகமா! அது அப்படி நடக்கலேயாணு, நான் என் காதை நறுக்கி இந்த ரெண்டு பாம்படத்தையும் கீழே வச்சுடுதேன்!''

இப்படிச் சொல்லித் தனது இரண்டு காதுகளிலும் தொங்கிக் கொண்டிருந்த பாம்படங்களைத் தொட்டுக் காட்டினுள் வல்லாளவேலரின் மனைவி!

''பிச்சி! பாம்படம் கிடக்கட்டும்.- இதுக்காக அந்தப் பாம்படத்தை ஏன் இழுக்கணும்? விசயத்தைச் சொல்லேன் முதல்லே!''

மனைவியின் முகத்தில் ஒரு தெளிவு மலர்ந்தது. அவள் சொன்னுள்:

''நான் எல்லா விசயமும் கேட்டுத் தான் வச்சிருக்கேன். பாஞ்சாலங் குறிச்சிக்காரனே வந்து குறி சொல்லியிருக்கான்!''

''யாரு? சக்கம்மாக்காரனு?''

''ஆமா! சக்கம்மாளே சொல்லியிருக்காளாம்! சிங்கம்புத்தூருப் பொண்ணு ஏலமலேக்குத்தான் அப்பகன்னு பூசையிலே கேட்டுச் சொன்னுன் கோடாங்கி!''

''கோடாங்கி அடிச்சுக்கிட்டேசொன்னுனு?'' என்று கேட்டார் வல்லாளவேலர்

''ஆமா! அதுவும் பகல் நேரத்துக் குறியில்லே! நடுச் சாமத்திலே மயானத்திலே போயிப் பூசை போட்டுக்கிட்டு, அந்தாக்குலே அப்படியே வந்துசொல்லியிருக்கான்! நானும் தலைமுறை தலைமுறையாக் கேட்டிருக்கேன். கோடாங்கி சொன்னது பொய்யாய்ப் போனதே இல்லே...!''

வல்லாளவேலர் பக்தி பரவசத்தோடு அந்த வார்த்தைகளைச் செவிமடுத்தார்! அவருக்கும் தெரியும். சக்கம்மாளைக் கேட்டுச் சொல்லுகிற குறி, இதுவரையில் தப்பிப் போனதில்லே என்பதை வல்லாளவேலர் தமது அனுபவத்தில் அறிந்திருக்கிருர்!

''பிச்சி! எனக்குக் குறிகளிலே நம்பிக்கைதான். ஆஞ இந்தக் குறிகாரனுகளை நம்புறதுக்கு இல்லேயே!'' என்று ஒரு சிறு சந்தேகத்தைக் கேட்டுத் தெளிவு படுத்திக் கொள்ளலானுர்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது! குடி வெறியிலே பேசலே அவன்! நல்ல ஆவேசத்திலே தான் சொன்னுன். ஒரு தடவைக்கு மூணு தடவையாச் சொன்னுன். இண்ணைக்கி நேத்து இல்லே. அவன் சொல்லி அஞ்சு வருசம் ஆகுது!''

''அஞ்சு வருஷம் ஆச்சா?'' என்று கேட்டார் வல்லாளர்.

''ஆமா! அவன் சொன்ன கணக்குப் படி பார்த்தா இந்த வருசமே அந்தக் கலியாணம் நடக்கணும்!''

''எந்தக் கலியாணம்?'' என்று மீண்டும் குழப்பத்தோடு கேட்டார் வல்லாள வேலர்.

''என்ன கேக்குறீக நீங்க? எந்தக் கலியாணத்தைப் பத்தி நான் இதுவரை சொல்லிக் கிட்டிருக்கேனும்? விடிய விடிய ராமாயணம் கேட்டு, சீதைக்கு ராமர் சித்தப்பாண்ணு சொல்லுறீகளே!''

இந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே தனது நெற்றிக் கண்ணைத் திறந்தாள் வல்லாளரின் மனைவி.

''கோவிச்சுக்கிடாதே பிச்சி! ஒரு ஆவல், ஒரு கவலை, இப்படியும் நடக்குமா, இப்படி நடக்கணுமே அப்படீன்னு ஒரு ஒரு ஒரு......''

''சரி சரி! நீங்க குழம்பறது குழம்பிட்டுப் போங்க! இனிமேல் துரையை இந்த மாதிரிக் குழப்பி வடிக்காதீக! தெரிஞ்சுதா? பாவநாசத்துத் தண்ணியே வத்திப் போனாலும் சரி, இந்தக் கலியாணம் நிக்காது! செல்விக்கு மாப்பிளை பொன்னுத்துரைதான். அந்தக் கலியாணம் இந்தத் திருவிளாக்குள்ளே நடக்கலையானு, என் பேரை மாத்திக் கூப்பிடுங்க. நான் பிச்சம்மா இல்லே!''

இப்படித் தீர்மானமாகச் சொல்லி விட்டு வீட்டுக்குள்ளே நடந்தாள் வல்லாளவேலரின் மனைவி.

கோடாங்கிக்காரனுடைய குறியைப் பற்றி வல்லாளவேலருக்கு எவ்விதமான சந்தேகமும் இடையாது. ஜமீன் வட்டாரங்களில் இதுவரை சக்கம்மாளின் வார்த்தை பொய்த்ததில்லை. ஆனால் நிலைமையோ விபரீதமாக இருக்கிறதே!

தாமரைச் செல்வியின் மனத்திலோ பொன்னுத்துரை இல்லை! ஜமீந்தாரிணியோ என்றால், சிங்கம்புத்தூர் மாளிகையின் போக்கையே இப்பொழுது மாற்றி விட்டாள்! குதிரைகள் போன இடம் புல் முளைத்துப் போய் விட்டது! மாளிகை எல்லாம் சித்திரமயமாக மாறுகிறது! வில்வநாதனோ?

வில்வநாதனைப் பற்றி நினைத்ததுமே வல்லாளவேலருக்கு உட்கார்ந்திருக்க முடியவில்லை. அப்படியே எழுந்து நடக்க ஆரம்பித்தார்! முற்றத்தில் அங்கு மிங்கும் நடந்து கொண்டே சிந்தனை செய்யத் தொடங்கினார். அப்போது அவருடைய வேலைக்காரன் ஓடி வந்து யாரோ இரண்டு போலீஸ்காரர்கள் வந்திருப்பதாக வல்லாள வேலரிடம் அறிவித்தான்! (தொடரும்)



சிறுவர் உலகத்தில் எப்போதும்
நியூட்ரைன் என்பதே பேச்சு

Nutrine Sweets

நியூட்ரைன் கன்பெக்ஷனரி கம்பெனி
பிரைவேட் லிட்., சித்தூர், ஆந்திரப் பிரதேஷ்!

அயோத்திமா நகரில் கைகேயியின் மாளிகை. அந்த நேரத்தில் கேகய நாட்டின் பிரபல ஜோதிடரான சாரபுத்திரர் கைகேயியைப் பார்த்து விட்டுச் செல்ல வந்திருந்தார்.

"வாருங்கள், சாரபுத்திரரே!" கைகேயி அவரை வரவேற்று ஆசனத்தில் அமர்த்தினாள்.

"சௌக்கியமாகத் தானே இருக்கிறாய், குழந்தாய்?" சாரபுத்திரர் கேட்டார்.

"சௌக்கியத்துக்கு என்ன குறைவு சுவாமி? அருங்குணம் படைத்த சக்கரவர்த்தி கணவராகக் கிடைத்திருக்கிறார். அக்கா கௌசல்யா தேவியும், சுமித்திரையும் அன்பின் உருவாக இருக்கிறார்களென்றால், அவர்களுக்குப் பிறந்த புதல்வர்களோ நான்கும் மேலாக என்னை நேசிக்கிறார்கள்..." ஆனந்த மிகுதியில் கூறிய கைகேயி கனி வகைகள் எடுத்து வந்து அவரை உபசரித்தாள். அவரும் மனத் திருப்தியுடன் ஏற்றுக் கொண்டார்.

"சுவாமி! பரதன் தன் சகோதரனுடன் கேகய நாட்டுக்கு வந்திருப்பதைத் தாங்கள் அறிவீர்களல்லவா?" கேகயபுத்திரி கேட்டாள்.

"அறியாமல் என்னம்மா? நான் இங்கு புறப்பட்ட போது உங்கள் நலனை அறிந்து வரும்படி கூறினான் அவன்."

"ஆமாம் ஸ்வாமி, பரதனுக்கு என்றுமே இங்குள்ளோர் மீதே எண்ணம். அனைவரையும் விட்டு விட்டுச் செல்லவே அவனுக்கு விருப்பமில்லை. முக்கியமாக ராமனை விட்டுப் பிரியவே மனமில்லை. ஆயினும் என் சகோதரனின் விருப்பத்துக்கு இணங்க வேண்டுமென்பதற்காகப் பரதனைப் போகும்படி கட்டளை யிட்டேன். சுமித்திரை அக்காவின் குணத்தை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். கண்ணின் மணிகளாக இரு புத்திர இரத்தினங்களைப் பெற்றிருக்கிறார். ஆயினும் தன்னைப் பிறருடைய தொண்டுக்கு அர்ப்பணித்து விட்டது போல், புதல்வர்களுக்கு அண்ணன்மார்களின் சேவையில் ஊக்கத்தைக் காட்டி விட்டார். அதனால் பரதன் புறப்பட்டபோது சத்ருக்னனையும் அனுப்பிவிட்டார்." கைகேயி ஆனந்த மிகுதியில் கூறிக் கொண்டே போனாள்.

"ஆமாமம்மா, நாடும் ஊரும் அறிவேன். அயோத்தி மாநகர் நல்லாட்சிக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டு..." எனக் கூறியவர் மௌன முகத்தைத் தொங்க விட்டுக் கொண்டார். முகத்தில் குதூகலத்தையே காணவில்லை.

கைகேயி தன் பாட்டுக்குப் பேசிக்கொண்டே போனாள். "நல்லாட்சிக்கு ஏது தடங்கல் ஸ்வாமி. தர்மம், நீதி நெறி யாவற்றுக்கும் இந் நாடு பொருள் கூறும். ராஜ பரம்பரை மீதும் ஒரு குறையுமில்லை. 'இவரு'க்குப் பிறகு ராமன் சிம்மாசனத்தில் அமர்ந்துவிட்டால் மக்கள் மனத்தில் பொங்கும் ஆனந்த வெள்ளத்துக்கு உவமையே கூற முடியாது. வேண்டாம், ஸ்வாமி. அதெல்லாம் நான் கூறினால் கர்வத்தைக் காட்டுவது போல் தோன்றும். ராமன் ஒருநாள் அரசனாகத்தான் போகிறான். அன்று உங்களைக் கூப்பிட்டுக் காட்டுகிறேன். அப்போது உங்கள் வாயினாலேயே புகழுரைகள் வெளி வரும். நான் கேட்டுக் கேட்டு மகிழ்த்தான் போகிறேன்."

"கைகேயி!" இடையே மெள்ளக் கூப்பிட்டார் சாரபுத்திரர். தன்போக்கில் அவள் கற்பனை மாளிகை கட்டி அதில் நுழைவதை அவர் விரும்பவில்லை. அவள் கூறியது அனைத்தும் உண்மைதான். ஆயினும்....

"என்ன சுவாமி! ...ஐயோ, உங்கள் .....முகம்....." கைகேயி கலவரமடைந்தாள்.

"கைகேயி, நீ பெண்...."

"அதனால்?"



# கைகேயியின் சூழ்ச்சி

எஸ்.ரங்கநாயகி

"கைகேயி! முதலில் நீ மனத்தில் உறுதியுடன் இருக்க வேண்டும்..."

"சொல்லுங்கள்...."

"பெண்கள் அரசாட்சி விவகாரங்களில் முக்கிய பங்கெடுத்து அரச பரம்பரையின் நல்வழிக்கு வழிகோல வேண்டும் என்பது என் பெருத்த அவா! அரசு, நாடு இவற்றைப் பற்றிய நல் போக்கில் போவது முறையல்ல. ராஜ்ய பாரத்தில் இடையூறுகள்...."

"இடையூறு? இந்த இக்ஷ்வாகு வம்சத்தை நீங்கள் இன்னும் அறியவில்லைபோலிருக்கு..." குரலில் சற்றுக் கடுகடுப்புடனே கூறினாள்.

"பதற்றப் படாதேம்மா குழந்தாய்! நான் உங்கள் நாட்டையும் அறிவேன், நாட்டின் சோதிடத்தையும் அறிவேன்."

"சுவாமி! நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?"

"நான் முன்பே சொன்னது போல் அரச பரம்பரையின் இன்னல்களைப் போக்குவதில் பெண்களும் பங்கு கொள்ள வேண்டுமம்மா!"

"போர் முனைக்கும் சென்று இன்னல்களைத் தீர்க்கும் சக்தியுடையவர்களாகவே நாங்கள் இருப்போம். அரச பரம்பரையின் நலனுக்காக உயிருக்குயிரான பொருளைத் தியாகம் செய்யப் பின் வாங்க மாட்டோம். அல்லது மரணமோ மரணத்துக்கு ஒப்பான கஷ்டமோ நேரிடினும் ஏற்கத் தயங்க மாட்டோம்...." உறுதியுடன் கூறினாள் தசரதப் பிரியை.

"போதும்...போதுமம்மா! பெண்களின் அருங்குணத்தால் புகுந்த வீட்டைப் போல் பிறந்த வீடும் பெயரும் சீரும் சிறப்புமாக விளங்கும். உன் விஷயத்தில் அவ் வார்த்தை பொருள்பட விளங்கும் என்பது உறுதி....."

சாரபுத்திரர் தன்னிருப்பிடத்தை விட்டு எழுந்து விட்டார். புறப்பட்ட போது அவர் கூறின சோதிடம் தான் கைகேயியை வேதனையில் ஆழ்த்தியது. தசரதருக்கு மரணம் நேரிட்டபின் நாடு சுமார் ஒரு பதிற்று வருடங்கள் செம்பாதனத்தில் அரசாற்றுக் கிடக்குமாம்.

சாரபுத்திரர் சென்று விட்டார். கைகேயி பெருந்துயரில் ஆழ்ந்து விட்டாள். அரசனற்ற



ராஜ்யம்! எவ்வளவு நினைத்துப் பார்த்தும் அதற்கான காரணம் ஒன்று இருப்பதாகவே புலப்படவில்லையே! அயோத்தியின் பிரபாவமும் அதன் கீர்த்தியும் அரசர் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. சத்துருக்கள் கண்ணெடுத்தும் பார்க்க முடியாத பேரரசு. அப்படி யிருக்கும்போது ........ தசரதருக்குப் பிறகு ரகுராமனே பட்டத்துக்குரியவன்... அரசாட்சியில் அவன் உயிருக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டு, அதனால் ராஜ்யத்தில் எதிர்பாராமல் கலவரம் நேரிடுமோ? ராமன் உயிருக்கு ஆபத்தா? ஐயோ, நினைக்கக் கூட முடியவில்லையே....!

தசரதர் இருக்கும் போதே ராமனுக்கு முடிசூட்டு விழா நடத்தி அரச பதவியில் அமர்த்தி விட வேண்டும். அப்போது தந்தையின் உதவி மூலம் ராமன் அரசாட்சியை மேலும் வலுவடையச் செய்து விட்டானானால் இப்போதுள்ள ஓரிரண்டு சத்துருக்களும் தலை தூக்க மாட்டார்கள். அரச பதவியில் இருந்தபடி பிரஜைகளை மேலும் கவர்ந்து விடுவான் ராமன். அதன் பிறகு பயப்பட வேண்டிய காரணமே இருக்காது. தசரதர் அந்திம காலம் வரை, அரச பீடத்தில் இருந்தாலல்லவோ அவருக்குப் பிறகு நாடு அரசற்றுப் போகும்? அவர் இருக்கும் போதே அரச பீடத்துக்கு ஏற்பாடு செய்து விட்டால்...?'

கைகேயி பலவித யோசனைகளில் மூழ்கி விட்டாள்.




வழக்கம்போல் தசரதர் கைகேயியின் மாளிகைக்கு வந்து கொண்டிருந்தார். கைகேயி சாரபுத்திரர் கூறியதைப் பற்றிக் கணவரிடம் கூறவேயில்லை. கணவரைத் துயரத்தில் ஆழ்த்த அவள் விரும்பவில்லை. ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைக்கும்படி கணவரிடம் பேச்செடுக்க எவ்வளவோ முயன்றாள். ஆயினும் வார்த்தைகள் மட்டும் வாய்விட்டு எழும்பவில்லை.

'கணவன் இனி ஒடுங்கிப் போன கிழவன். ராமனே அரச அழகு பெற வேண்டியவன் என நினைத்து விட்டாயோ! கணவனை விட ராமன்தான் உனக்கு உயர்வு' என்று விளையாட்டாகவே கணவர் கூறி விடுவாரோ என்ற பயமோ! அல்லது பட்டாபிஷேகத்தைக் கூறும்போது சாரபுத்திரர் கூறியதைச் சொல்லிவிடும்படி நேரிடும் என்ற பயமோ! மனக்கிலேசத்தை உள்ளடக்கி அவள் வழக்கம்போல் இருந்தாள்.

அன்றொரு மாலை கைகேயி தனித்து இருந்தனள். பரதனும் சத்ருக்னனும் இன்னமும் கேகய நாட்டில் இருந்தனர். ராமனோ சற்று முந்நேரம் வரை உரையாடி விட்டு இப்போது தான் சீதையின் மாளிகையை நாடிச் சென்றிருந்தார். கௌசல்யை என்றைக்குமே தன் மாளிகையை விட்டு அதிகமாக வெளிக்கிளம்ப மாட்டாள். சுமித்திரையையும் இன்று ஏனோ காண







தென்னிந்திய ஆபீஸ் 5/149 பிராட்வே, சென்னை - 1

இல்லை. தனிமையை என்றுமே அதிகம் விரும்பாத கைகேயி கரித்திரையுடன் உலா வாடி விட்டு வர வெளிக் கிளம்பினாள்.

அதே நேரத்தில் கைகேயியின் அந்தரங்கத் தோழி சாருகேசி வந்தனள். அவளுடன் அவளது அருமைப் புதல்வன் பிரும்மதத்தன் வந்தான். அவன் கண்களைத் துணி போட்டு இறுக்கிக் கட்டி வைத்திருந்தாள் சாருகேசி. அவன் கையில் வில்லும் அம்பும் இருந்தன.

"சாருகேசி, மகன் என்ன குற்றம் புரிந்து விட்டான்? கண்களைக் கட்டி இழுத்து வர என்ன துணிவடி உனக்கு? நியாயம் வழங்கு வதை அரச பரம்பரைக்கே விட்டு விடு" என்று கைகேயி கூறினாள்.

சாருகேசி பதில் கூறவில்லை. அதற்குப் பதில் அருகிலிருந்த ஒரு மரத்தின் கனியைப் பறித்துத் தாமரைக் குளத்தில் எறிந்தாள். அது விழுந்த சத்தம் கேட்டுக் கைகேயி அதை நோக்குவதற்குள் ஓர் அம்பு அந்தப் பழத் தைக் குத்தி நின்றது.

"சபாஷ்!" சாருகேசி ஆனந்த மிகுதியில் கூறியபடி மகனின் கண் கட்டை அவிழ்த்து விட்டாள்.

கைகேயி ஒரே நிமிடம் ஸ்தம்பித்துநின்றாள். பிறகு அனைத்தும் புரிந்து கொண்டு விட்டாள். சத்தத்தை மட்டும் கேட்டுப் பிரும்மதத்தன் அம்பு எய்திருக்கிறான். அவனுடைய இந்தக் கர்மாவைக் காட்டச் சாருகேசி பழத்தை எறிந்து சத்தத்தை உண்டாக்கி யிருக்கிறாள்.

"அம்மா! மகனின் வில் வித்தையைப் பார்த்தீர்களல்லவா? தங்களது ஆசி அவனுக் குக் கிடைக்க வேண்டுமென்பதற்காகவே அழைத்து வந்தேன். சப்தபேதி பாணத்தில் நம் அரசரைப் போல்...." சட்டென்று நிறுத்திக் கொண்டாள் சாருகேசி.

அரசியின் முகம் ஏன் ஒரே நிமிடத்தில் சோர்வடைந்து விட்டது?

"அம்மா! தவற்றை மன்னிக்கவும். நான் செய்ததில் ஏதேனும் குற்றமிருப்பின்...."

கைகேயி முகத்தை மலர வைத்துக் கொண் டாள். "எதற்கு மன்னிப்பு சாருகேசி? உன் மகன் நீண்ட ஆயுளுடன் கலைகள் அனைத்திலும் வல்லவனாகத் திகழ என் ஆசிகள் அவனுக்கு நிரம்ப உண்டு. ஆயினும் சத்தத்தைக் கேட்டு அம்பு எய்வதும் கலையில் மட்டும்....சாருகேசி, நான் என்றுமே காதால் கேட்டுச் செய்வதை விடக் கண்ணால் கண்டு செய்வதையே சிறப் பாக எண்ணுகிறேன்." மீண்டும் கேகய புத்திரியின் முகத்தில் வாட்டம் எழுந்தது.

"அம்மா, தங்கள் வார்த்தைகளுக்குப் பொருள் காண விரும்புகிறேன்." பிரும்ம தத்தன் பணிவுடன் கூறினான்.

"சப்தத்தைக் காதால் கேட்டு அம்பை எய்வதற்குள் சப்தத்தின் மூலப் பொருளைப் பிசகாது உணர வேண்டியது அவசியம் குழந் தாய்! ஒரு முறை அரசர் வேட்டையாடச் சென்ற போது இந்த வித்தையைப் பிரயோ கித்து....வேண்டாம், வேண்டாம்... நீ குழந்தை. உனக்கு இதெல்லாம் தெரிய வேண்டாம்....அம்பை எய்யும் போது கவனத் துடன் மட்டும் நடந்து கொள்ளப்பா...." கைகேயி விடுவிடென்று அவ்விடத்தைவிட்டு நகர்ந்து விட்டாள்.

தாயும் மகனும் திகைத்து நின்றனர். அர சியின் மனம் எது காரணத்தாலோ புண்பட்டு விட்டதே எனச் சாருகேசி வருந்தினாள். மதாந் திருக்க சமயத்தில் அரசியிடம் கேள்வி கேட்டுத் துன்புறுத்த விரும்பவில்லை அவள்.

மஞ்சத்தில் அமர்ந்த கைகேயிக்குப் பழைய நினைவுகள்தான் பனிக்கிட்டன. சப்தபேதி பாணத்தின் மூலம் தசரதர் யானை என நினைத்து ஒரு முனி குமாரனை வீழ்த்தி விட, அதன் காரணமாக அவன் தந்தை, 'உன் மரண காலத்தில் உன் புத்திரர்கள் அருகி லிருக்க மாட்டார்கள்' எனச் சாபம் கொடுத்த கதையைக் கைகேயி மட்டுமே அறிவாள்.. பிரும்ம தத்தனின் வில் வித்தையைக் கண்ட தும் அந்த நினைவல்லவோ சுற்றிக் கிளம்பி விட்டது. அந்திம நேரத்தில் புத்திரர்கள் இல்லாமல் அரசர் எப்படித் தவிப்பாரோ? கைகேயியின் மனம் வேதனையில் ஆழ்ந்தது.

அயோத்திமா நகரில் ஒரே பரபரப்பு.. தசரதசக்கரவர்த்தி திடீரெனச் செய்த முடிவு அனைவரையும் ஆச்சரியத்திலும் மகிழ்ச்சியிலும் ஆழ்த்தியது. நகரிலே மின்னல் போல் செய்தி பரவியது. எங்கும் கோலாகல ஆரவாரம்.

'பரந்தாமன் ராமபிரானுக்கு மறுநாள் பட்டாபிஷேகம். ராஜ்ய பாரத்தைத் தனயன் மீது சுமத்திவிட்டுத் தந்தை விலகிக் கொள்ளப் போகிறார்.'

மந்தரை வந்து இச்சுபச் செய்தியைக் கூறவே, கைகேயின் மனத்திலே ஒரு களிப்பு உணர்ச்சி. அரசரிடம் அவள் எதைக் கூற நினைத்திருந்தாளோ, அதுவே இப்போது செயல் கூடி நிற்கிறது.

கைகேயி உடனே கழுத்திலிருந்த முத்து ஹாரத்தை எடுத்து மந்தரையிடம் கொடுத் தாள். மந்தரை வெகுண்டாள்.

"பாவிப் பெண்ணே! உன் கணவருக்கு வயதாகி விட்டது. அவர் ஒருநாள் இறந்து விட்டால் நீ இந்த இளம் வயதிலேயே கஷ்டத் துக்கு உள்ளாகிச் சக்களத்தி மகன் கையில் திணறுவாய். கைகேயி, உன் வயதை நினைத் துப் பார்...."

கைகேயின் மனத்தில் பேரிடி போன்ற தோர் உணர்ச்சி. 'கைகேயி, உன் வயது... உன் வயது....உன் கணவர் இறந்துவிட்டால்' இவ் வார்த்தைகள் சுழல் சுழலாக மனத்தில் சுற்றி வந்தது. மஞ்சத்தில் சாய்ந்துவிட்டாள்.

நினைவு விவாக காலத்துக்குச் சென்றது. விவாகம் முடிந்த பிறகு கணவன் வீடு புறப் பட்ட கைகேயி, இதே சாரபுத்திரரிடம் விடை பெறச் சென்றாள். உள்ளே சாரபுத்திரர் ரகசியமாகத் தம் மனைவி அமலாவிடம் கூறிக் கொண்டிருந்தார்.

"அமலா! கேகய புத்திரியின் ஜன்ம பத்தி ரத்திலிருந்து நான் புரிந்து கொண்டது இவ் வளவுதான். குறிப்பிட்ட இந்த வயதில் அவள் கணவரை இழந்து கைம்பெண்ணாகி...."

"ஐயோ வேண்டாம், கூறாதீர்கள். நம் இள வரசிக்கா இக்கதி நேரிடும்? தசரத சக்ரவர்த்தி யுடன் அவள் விவாகத்தை நீங்கள் நிறுத்தி யிருந்திருக்கலாமே....!"—அமலா கூறினாள்.

"விதியை மாற்ற முடியாது அமலா. யாருடனேனும் அவள் விவாகம் நடந்தே தீர வேண்டுமல்லவா? மேலும் தசரதருக்கு அப்போது மரண காலமாக இருக்கலாம். அதனால்தான் விதி அரசகுமாரியை அங்கு சேர்த்து விட்டது...."

கைகேயி விடைபெறச் சென்றவன் தான் வந்ததைக் காட்டிக் கொள்ளாமலே திரும்பி விட்டாள். அதற்குப் பிறகு எத்தனையோ நிகழ்ச்சிகள். அவற்றிலூடே இந்தக் குறிப்பை அவள் மறந்தே விட்டிருந்தாள். இன்றோ.....

'வயது' 'கணவர் மரணம்' எடுத்துக் காட்டுவதற்கே மந்தரை வந்து விட்டாளோ! இதே வயதைத்தான் அவரும் குறிப்பிட்டிருந்தார். அப்படியானால் கைம்மை பூணும்நாளும் வந்து விட்டதோ?

தொடர்ச்சியாக மற்றொரு துன்பம் ஆட்கொண்டது. 'தசரதர் இறந்த பிறகு இராஜ்யம் அரசனற்றதாக நிற்குமென அவரே திடீரெனத் தோன்றிக் கூறினாரே! தந்தை மரணம் கேட்டுப் புதல்வர்கள் துன்புற்று உயிருக்கு ஏதேனும்.....அப்படியும் நேரிடுமோ?'

இந்த இக்கட்டிலிருந்து தப்ப வழி?

மந்தரை சொல்லிவிட்டாள்!

''என்னது? பரதனுக்குப் பட்டாபிஷேகம்; ராமனுக்கு வனவாசமா?'' - கைகேயி முதலில் திடுக்கிட்டாள்.

பலப் பல யோசனைகளுக்குப் பிறகு மந்தரை கூறிய வழியே அவளுக்குச் சிறந்ததாகப்பட்டது. அரசரின் அந்திம காலம் இது. புத்திரர்களை அவர் அருகில் இருக்கவிடாமல் வெளியே அனுப்பி விட வேண்டும். அப்போதுதான் புத்திரர்களின் உயிருக்கு ஆபத்து ஒன்றும் நேராது. அதுமட்டுமல்ல. தசரதர் இறந்த பிறகு அரசனற்ற ராஜ்யமாக இருக்கப் போகிறது இந்நாடு. ராமன் அரசனானால் பகைவர்களின் காரணமாக அவனுக்கு உயிர்த் துன்பம் அல்லது வேறு வித கஷ்டமேற்பட்டு அவமானத்துக்கு உள்ளாகாமல் இருக்க வேண்டும். அதனால் நாட்டை விட்டு ராமனை வெளியேற்றி விடுவதே நல்லது. இலக்குவன் ராமனோடு கண்டிப்பாகப் புறப்பட்டு விடுவான். பரதன் மாமன் வீட்டிலிருக்கிறான். அவன் வந்தாலும் ராமனின் மீதுள்ள பணிவன்பு காரணமாக ராஜ்யபாரத்தை ஏற்க மாட்டான். ராமனை நாடி வனத்துக்குச் சென்று விடுவான். சத்ருக்னனும் உடன் கிளம்பி விடுவான். போகட்டும், நால்வரும் வனத்திலேயே சுகமாக வசிக்கட்டும். முனிவர் சாபத்தின் காரணமாகவோ, அல்லது சாருபுத்திரர் கூறிய சோதிடத்தின் ஆதாரத்தினாலோ நான்கு புதல்வர்களும் உயிருக்கு ஆபத்தின்றி எங்கேயாவதுவசிக்கட்டும். திடீரெனராமனைக் காட்டிற்கு அனுப்பும்படி கேட்கவும் முடியாது. ஆகையால் மந்தரை காட்டுவது போல் பரதனுக்குராஜ்யாபிஷேகத்தைக் கேட்கவேண்டும். வாக்குதத்தத்தினாலல்லாது ராமனை விட்டுத் தசரதரைப் பிரிக்க முடியாது. மந்தரையின் மூலம் ஆண்டவனே வழிகாட்டுகிறார்போலும்.

கடைசியில் கைகேயி முடிவுக்கு வந்து விட்டாள். மந்தரை கூறியவற்றை ஏற்று, கோபாக்கிரகத்தில் சென்று அலங்கோலமாகப் படுத்துவிட்டாள். மந்தரை திருப்தியுடன் தன்வழியே சென்றாள்.

தசரதர் கைகேயியின் வார்த்தைகளைக் கேட்டு மூர்ச்சித்த போது அவள் மனம் எவ்வளவு துன்புற்றது! அனைத்தும் நோக்கி மனம் அழுதது. கணவருக்கு அளித்து விட்ட துன்பத்தின் உடல் பதறியது. நெஞ்சினில் இரக்கம் சுரந்த இடத்தைப் புதல்வர்களின் நலன் பொருட்டுக் கொடுமையென்னும் கற்களை வைத்து அடைத்தாள்.

ராமன் தந்தையின் வாக்கைக் காப்பாற்ற வனத்துக்குப் புறப்பட்டபோது அவள் நெஞ்சு துடிதுடித்துக் கதறியது. சீதையும், இலக்குவனும் பின்பற்றுவது கண்டு மனம் சொல்லொணா வேதனையில் ஆழ்ந்தது. கடைசியில் தனயனின் பிரிவே தந்தைக்கு யாவும் முடிந்து விட்டதை அவள் கண்டபோது விக்கித் தவித்தாள். முனிவர் சாபத்தின் காரணமாகத் தசரதர் புதல்வர்கள் அருகில் இல்லாமலே மரணமெய்தி விட்டார். புதல்வர்களின் உயிருக்கு ஆபத்தில்லை....

கைகேயியின் சூழ்ச்சி வீண் போக வில்லை. மைந்தர்களைக் காப்பாற்றி விட்டாள். சாருபுத்திரரின் சோதிடம் பலித்தது. ஆயினும் அரச பரம்பரைக்குக் கேடில்லை. சொல்லொணாத் துன்பங்களையும், மக்கள் சுற்றார் சொந்தம் அனைவரின் ஏச்சுப் பேச்சுக்களையும் சகித்து அவள் எடுத்த காரியத்தை முடித்து விட்டாள். அரசாட்சிக்கும் பங்கமில்லை.

பதினான்கு வருடங்கள் முடிந்து எம்பிரான் ராவண வதத்தையும் முடித்துக் கொண்டு திரும்பி நல்லாட்சி நடத்தி வந்த காலத்தில் கைகேயியின் அந்திம காலம் நெருங்கி விட்டது. இன்னும் சிறிதே நேரத்தில் அவர்களை விட்டுப் பிரிந்து விடுவாள். ராமன் தம் மடியில் அவள் தலையை வைத்திருந்தார்.

அப்போது ஒருவரும் எதிர்பாராமல் கேகய நாட்டிலிருந்து சாருபுத்திரரின் மகன் விஜயபுத்திரன் அங்கு வந்தான். கைகேயியின் பாதங்களில் மலர்களை அர்ச்சித்துவிட்டுக் கையால் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

இலக்குவனும், பரதனும் அசட்டையாகச் சிரித்தனர்.

''லக்ஷ்மணா! பரதா! புனிதப் பொருளைக் கூர்ந்து நோக்காது அசட்டை செய்வது நல்லதல்லப்பா. கைகேயி அரசி உங்களுக்கு இழைத்து விட்டதாக நினைக்கும் அநீதிகளை உள் நோக்கிப் பார்த்தால் அதில் உங்களுக்கும் உங்கள் குலத்துக்கும் எவ்வளவு நன்மைகள் நேரிட்டன என்பது புரியும். முனிவர் சாபத்தையும், அரசனற்று நிற்கப் போகும் ராஜ்யத்தின் நிலைமையையும் அவள் முன்பேஅறிவாள். அதனால் முன்னேற்பாடாக அரசர் இறக்கும் போது உங்கள் உயிருக்கு ஆபத்து நேரிடாமல் இருக்கும் பொருட்டும், அரசனற்ற ராஜ்யத்தின் காரணமாக உங்களுக்குத் துன்பம் நேரிடாதபடி உங்கள் பரம்பரையைக் காக்கவும் அவள் சூழ்ச்சி செய்திருக்கிறாள். மக்களின் ஏச்சுக்களையும் சொந்த மகனின் கடுஞ்சொற்களையும் சகித்தாள். ஆயின் அவள் தன் தியாகத்தைக் காட்டவே இல்லை. தான் சூழ்ச்சி செய்த காரணத்தை விளக்கி, தன் தியாகத்தைப் பறைசாற்றிக் கொள்ள விரும்பாததே அதற்குக் காரணம். அவள் தியாகத்தின் மூலம் உங்கள் குலத்தின் பெருமை ஓங்கியது. உங்கள் பெரும் புகழும் பரவும் நேரத்தில் இவற்றை உங்களுக்குத் தேடித் தந்த அரசியின் பெயரோ ஏச்சுப் பொருளாக நிற்கும்......'' விஜயபுத்திரன் கூறிக்கொண்டே போனான்.

அதே சமயம் ராமனின் திருமுகத்தைப் பார்த்தபடியே அகண்ட ஜோதியுடன் கலந்து விட்டாள் கைகேயி.

''சின்னக் குழந்தை போல் அழாதே, ரகு! ஆண்டவன் யார் யாருக்கு எங்கெங்கு முடிபோட்டிருக்கிறானோ அங்குதான் கல்யாணம் நடக்கும்......''

'அட அம்மா! மனிதனின் கையாலாகாத்தனத்துக்கெல்லாம், மனிதனின் மதி பிசகுவதற்கெல்லாம் விதியையும் சதியையும் ஏன் இழுத்துப் பிணைக்கிறாய்?' என்னுள் எழுந்த கேள்வி என்னுள்ளேயே அடங்கி விட்டது. தாயாயிற்றே? ஏதாவது எதிர்த்துப் பேசலாமா?

''வாழ வேண்டிய பயிர் நீ. உன்னை என்றும் நானே கவனித்துக் கொண்டிருக்க முடியுமா?''





''நானென்ன இன்னும் சிறு குழந்தையா? என்னைக் கவனித்துக் கொள்ளும் சக்தி எனக்கு இன்னுமா ஏற்படவில்லை?''

நாடகத்துக்கு நாயகனான என்னிடமே கதை சொல்ல வருகிறாள் அம்மா. விந்தைதான்! விந்தையா? வேதனையா? பெற்றவ



மானேஜர் : எத்தனை தடவை சொன்னாலும் திருப்பித் திருப்பி இதே தவறைச் செய்கிறீரே. உமக்கு இது தான் கடைசியாகச் சொல்வது தெரியுமா?

குமாஸ்தா : ஏன் ஸார்! நானே வேறு எங்காவது மாற்றலாகிப் போகிறீர்களா?

மானேஜர் : ''

வின் வேதனை பிள்ளைக்கு விந்தையாகப்படு கிறதோ? இருக்கலாம்!

நான் என் தாய்க்கு — தாயின் வார்த்தைக் குக் கட்டுப்பட்டவன். கௌசல்யாவைக் கல் யாணம் செய்து கொண்டேன்.

என் தாயார் இறந்த உடனேயே, இட மாற்றம் வேண்டிச் சென்னைக்கு வந்துவிட் டேன். மூன்றாண்டுகள் ஓடி ஒளிந்தன.

**கா**ரணம் புரியாமலேயே கலவரம் மூண்டு விடுவது இயல்பல்லவா? என் உள்ளத்தில் ஏதோ ஒரு சலனம்....சலசலப்பு அவ்வப் போது அலை மோதிக் கொண்டிருந்தது. அது வும், ஹேமாவைப் பஸ் ஸ்டாண்டில் பார்த் ததிலிருந்துதான்....

ஆதியோடந்தமாக ஒன்றும் ஒளிவு மறைவு இல்லாமல் எல்லாவற்றையும் கௌசல்யா விடம் சொல்லியிருக்கிறேன். இப்போது கூட அவளிடம் சொன்னேன்.

''இன்றைக்கு ஹேமாவை பஸ் ஸ்டாண் டில் பார்த்தேன், கௌசி. விலாசம் கொடுத் திருக்கிறேன். இப்போது வருவாள். காப்பி, டிபன் தயார் செய்து வை.''

''வரட்டுமே..'' வேறெதுவும் கூறவில்லை அவள். பெண்மைக்கே உரித்தான ஒரு சிறு சிடுப்பு. கோபம், காரணமில்லாத கடுமை எதுவும் என் கௌசியின் முக அரங்கிலே இடம் பெறவில்லை. அவள் குழந்தை மனம் கொண்ட வள். நல்லவள்.

இதோ... ஹேமாவே வந்துவிட்டாள். கூட யாராவது வருகிறார்களா? இல்லையா.. ஒரு வரையும் காணோம்!

''வா ஹேமா....'' என் அழைப்பிலே கண்ணியமிருந்ததை நானே உணர்ந்தேன். நான் கல்யாணமானவனல்லவா?

''வாருங்கள அக்கா....'' என்று ஓடிச் சென்று வரவேற்று அவள் கரம் பற்றி அழைத்து வந்த கௌசல்யாவை ஏற இறங்கப் பார்த்தாள் ஹேமா. 'இவள் யார்?' என்ற வினாவை ஏந்தி நின்றது அவள் பார்வை.

''என் மனைவி கௌசல்யா...'' சற்றும் பதற்றமில்லாமல் கூறினேன்.

''உங்கள் கணவரை அழைத்து வரக் கூடாதா அக்கா?''

''கணவரா? நான் கல்யாணமாகாதவள்'' என்று கௌசல்யாவின் கேள்விக்குப் பதில் அளித்த ஹேமா என்னைப் பார்த்தாள்.

கௌசல்யாவும் என்னை ஏறிட்டு நோக்கி னாள். அவள் பார்வையிலே பொதிந்திருந்த கேள்விக்கு விடை....?

'ஹேமா மனம் மாறி விருப்பாள், மணம் செய்து கொண்டிருப்பாள்' என்ற நினைவில் நிறைவில் தானே நான் கௌசல்யாவைக் கல்யாணம் செய்து கொண்டேன்?

பேச்சை மாற்ற எண்ணி, ''மாமா சௌக் கியமா ஹேமா?'' என்றேன்.

''அப்பாவா? இரண்டு வருடங்களாகின் றன அவர் போய்... நான் ஒண்டிக்கட்டை..''

''நீ ஏன் கல்யாணம் செய்து கொள்ள வில்லை?'' இக் குழந்தைத்தனமான கேள்வி யைக் கேட்டுவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டேன். உள்ளத்தில் பழைய நினைவுகள் விரிந்தன.

''**அ**ந்தப் பெண் ஹேமாவுக்கு எவ்வளவு அன்பிருந்தது உன் மேல்?''

அன்பை அளவெடுக்கும் தொனியில் கேட்க வில்லை அம்மா. அன்பைக் கண்டு எழுந்த ஆச் சரியத்தால் அப்படிக் கேட்டாள். அவள் பெண். பெண் மனத்தின் பரிவையும், பாசத் தையும், அன்பையும், அரவணைப்பையும் மற் றொரு பெண்ணால்தானே உணர முடியும்?

''அவளுக்கு உன் மேல் எவ்வளவு அன் பிருந்ததோ, அதைப் போன்ற மூர்க்க குணம் அவள் அப்பாவுக்கு...?''

புதிதாக எதையோ புரிய வைப்பது போல், பழைய கட்டுச் சாத மூட்டையை எவ்வளவு நாசூக்காகப் பிரிக்கிறாள் அம்மா!

ஹேமாவுக்கு இருக்கும் அன்பைப் போல் நான்கு மடங்கு மூர்க்க குணம் கொண்டவர் ஹேமாவின் அப்பா. என் தாய் மாமன்.

என்னையும் என் தாயையும் தவிர வேறு ஆளற்ற எங்கள் குடும்பமும், ஹேமாவையும் என் மாமாவையும் தவிர வேறு ஆளில்லாத அவர்கள் குடும்பமும் மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தது.

எனக்காக அவள் — அவளுக்காக நான். இந்த லட்சிய பாவத்தை மனத்தில் கொண்டு எத்தனை ஆண்டுகள் பழகினோம் நாங்கள்? காவேரிக் கரைக்கு மட்டும் கண்ணிருந்து வாயும் இருந்தால், சிறு வயதில் நாங்கள் மணல் வீடு கட்டிச் சிரித்து விளையாடி மகிழ்ந்ததைக் கண்டிருந்து வாய் ஓயாது சொல்லியிருக்கும். காவிரி மணலில் கட்டும் மனக்கோட்டை மலைக்கோட்டையளவு உயரமில்லா விட்டாலும், எங்கள் மனக் கோட்டை அதையும் விட உயரமாக இருக் கும். ஆனால் மலைக்கோட்டையைப் போல் அசைவற்றிருந்ததா?


காஞ்சன்
3.50
வெயிலில் இலேசான செருப்பணிந்து செல்லுங்கள்!
வெளிச்செல்லும் போதெல்லாம்
சௌகரியமாயிருக்கும்.
பாதத்திற்குப் பளுவாயிருக்காது.
சிறிதும் சிரமமின்றி வெயிலில்
நடக்க குஷியாயிருக்கும்.
கோடைகால நேரத்தில்
ஒரு நிமிடம்கூட விணுக்காமல்
இருக்க முடியும்.
இப்பொழுதே பாடா
செருப்பு ஒன்றை வாங்கி
அணிந்து கொள்ளுங்கள்.
அது மிக இலேசானது.
காற்றோட்டம் உள்ளது.
எளிமையானது — காலில்
இருப்பதுபோல்
தோன்றவே செய்யாது!
தருண்
5.25
கேதகி
6.50
விக்ரம்
5.95
Bata

ஹேமாவைச் சீண்டி விட்டுச் சுறுசுறுக்க வைப்பதில் எனக்கு ஓர் அலாதி இன்பம். "நான் உன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்" என்று கூறி முடிக்கு முன்னதாகத் தன் பிஞ்சு விரல்களால் என் வாயைப் பொத்துவாள். முகத்தில் நாணம் பொங்கும்.

சிற்றாடை கட்டித் துள்ளித் திரிந்தவளை வீட்டுக்குள் முடக்கிப் போட்டார் மாமா. அவள் பெரியவளாகி விட்டாளாம். நான் இனி அவளைப் பார்க்கக் கூடாதாம். ஆனால் பெரியவர்கள் அறியாமல் திருட்டுத்தனமாக அந்திப் பொழுதில் இருவரும் சந்தித்துப் பேசியதை, எங்கள் வீடுகளுக்குக் குறுக்காகக் கட்டப்பட்டிருக்கும் முள் வேலி தினம் தினம் கண்டு கேலி செய்தது. என்னையும் அவளையும், 'பிரிந்து போகாதீர்கள்' என்று சொல்வது போல் எங்கள் ஆடைகளைப் பற்றி இழுக்கும். விடுவித்துக் கொள்ளும் நேரத்திலும் ஏதாவது சிறு சிறு வார்த்தைத் துண்டுகள் உதிரும். கண்கள் காவியம் பேசும். .....!

எல்லாமே காலம் கடந்த சோகங்கள்!

விதவைத் தாய், ஏழைமைக் கோலத்திலேயே உழன்று என்னை வளர்த்தவள். நான் காலை ஊன்றிக் கொண்ட அவசரமான போது என்னுடைய குடும்பம் தழைக்கத் தொடங்கியது.

என் மாமா அப்பாவிகளின் கைப் பணத்தையும் வயிற்றெரிச்சலையும் ஒன்றாக வாரிக் கட்டிக்கொண்டு கள்ளக் கடத்தல் வியாபாரத்தில் இறங்கினார். அடாபிடி வழக்கில் பங்கு கொண்டு வெற்றியைத் தம் பக்கம் திருப்பிக் கொண்டு விடுவார். இன்னும் ஏட்டில் வடிக்க இயலாத எத்தனை எத்தனையோ சமூகத் துரோகங்கள்!

எப்படி இருந்தால் என்ன? எங்களைவிட அவர் தழைத்து விட்டார். திருச்சியில் ஒரு சுமாரான புள்ளியாகி விட்டார். கேட்க வேண்டுமா அவரது டாம்பீகத்துக்கு?

என்னதான் பணம் வந்து குவிந்தாலும், பாசம் என்னும் ஈரம் அவர் நெஞ்சினின்றும் உலர்ந்து உதிர்ந்து விட வேண்டுமா? பணத்தைக் கண்ட மனித மனம் எப்படியெப்படி யெல்லாம் எண்ணமிடுகிறது? குமாஸ்தாவான என்னை மருமகனுக்கிக் கொள்ள விரும்பவில்லை அவர். ஹேமாவுக்கு எந்தப் பணக்காரன் காத்திருக்கிறானோ?

திருச்சியிலே இருந்தாலே தன் மகளின் மனத்தை மாற்றமுடியாது என்று என் மாமா எண்ணி விட்டார் போலும்..!

கண்ணீரும் கம்பலையுமாக ஹேமா வண்டியேறிச் சென்ற காட்சி இன்னும் என் கண்முன்னால் நின்று வதைக்கிறதே.

சென்னைக்குப் போவதற்கு முன் அவளாகவே வந்தாள், சொல்லிக் கொண்டு போவதற்கு.

"ஆவல் நிறைந்திருக்கும் என் உள்ளத்தில் அனலை மூட்டிவிட்டுச் செல்கிறாய் என்பதை நினைவில் நிறுத்திக் கொள், ஹேமா....." என் இதயத்தின் ஏக்கம் குரல் வழியே கொப்பளித்ததை அவள் அறிவாளா? அறிந்தாள்.

மௌனத்தின் போர்வைக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழுதாள், விசும்பினாள். எத்தனை நேரம்தான் அழ முடியும்? என் பார்வைக்குப் பதில் சொல்லாமல் தப்ப முயன்றாள். முடியவில்லை.



அம்மா : குமார்! இனி நீ நாயின் காதைப் பிடித்துத் தூக்கினால் நான் உன் காதைப் பிடித்துத் தூக்குவேன்!
குமார் : நான் நாயின் வாலைப் பிடித்துத் தூக்கினால்...?
அம்மா : !!!!

"என் கையில் எதுவும் இல்லை அத்தான். புதுப் பணம் அப்பாவைப் பிடித்திருக்கிறது! எங்கிருந்தாலும் உங்கள் நினைவு என் நெஞ்சை விட்டு நீங்காது...."

அவள் போய் விட்டாள். அவள் நினைவு என் நெஞ்சை விட்டு நீங்கவில்லை. அது நிறைவு தருகிறதா? நிம்மதி தருகிறதா? நீண்ட வேதனை தருகிறதா? எனக்கே அது புரியவில்லை.

ஹேமா கௌசல்யாவைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டே என்னைப் பார்த்தாள்.

"அவளுக்கு என் பூர்வாசிரமம் தெரியும்" என்றேன் நான் சற்றும் தயங்காமல்.

"நாம் மனம் ஒன்றி வாழ முடியாவிட்டாலும், மனமொன்றி வாழ்ந்த வாழ்வைப் பற்றிய நினைவு என் நெஞ்சுக்கு இனிமை தருகிறது. அத்தான், உள்ளத்தால் ஒருவருடன் ஒன்றிய பிறகு, உடலை வேறொருவருடன் இணைப்பதை என் மனம் விரும்பவில்லை. உள்ளத்தையும் உடலையும் ஒருங்கே ஒருவருக்கே அர்ப்பணிக்க முடிந்தால்தானே இல்வாழ்வு நல்வாழ்வாகும்...?"

ஹேமாவின் பேச்சிலுள்ள கருத்தைக் கிரகிக்கும் சக்தி என்னிடம் இருந்தது.

"நீ பிரிந்த பிறகு மிகவும் சிரமப்பட்டு, என் உடலையும் உள்ளத்தையும் முழுதும் கௌசல்யாவுக்கே சொந்தமாக்கி விட்டேன். ஹேமா..." நான் கல்யாணமானவன், கண்ணியமானவன், என் நினைவு இன்னும் ஹேமாவைச் சுற்றியே வட்டமிடவில்லை என்பதை இருவருக்குமே உணர்த்தினேன்.

"ஆண்களால் முடியக்கூடிய செயல் அது."

ஹேமா ஆண் இனத்துக்கே சவுக்கடி கொடுக்கிறாளா?

"நீ சொல்வது தவறு ஹேமா. கிடைக்காத பொருளை எண்ணி எண்ணி ஏங்குவதை விடக் கிடைத்த பொருளைக் கொண்டே திருப்தி அடைய வேண்டும். எனக்குக் கிட்டாத பெண்

நீ. கிடைத்த பெண் கௌசல்யா. என்றும் அவனுக்கும் திருப்தி. அவளால் எனக்கும் திருப்தி. அதேபோல் நீயும் ஒருவனுக்குத் திருப்தியளித்து அவனால் நீ திருப்தியடைய வேண்டும் என்பதே என் ஆசை ஹேமா....."

அதற்கு மேல் எப்படி விண்டு கூறுவது?

"என்றும் முடியாத செயல் அத்தான். உள்ளத்தால் உங்களை வரித்து விட்டேன். இனி அங்கு வேறு ஒருவருக்கு இடமில்லை..."

ஹேமாவின் பேச்சு என்னைத் தகித்தது. இன்னும் என்னை மறக்கவில்லையா அவள்? இனியாவது மறந்து விடுவாளா? என்னை நம்பிய ஜீவனுக்குத் துரோகமிழைத்து விட்டு மற்றொருத்திக்கு என்னை அர்ப்பணித்து ஆனந்த வாழ்வு வாழ்கிறேனா? என்னை விட்டு எட்டாத தூரத்தில் விலகிச்சென்றவனுக்காக, நான் என்றென்றும் மண வாழ்வை அடையக்கூடாதா? அடைந்தது தவறு? ஹேமா என்றும் மணமாகாத வாழ்வு வாழப் போகிறாளா? அவள் மணவாழ்வை ஏற்க மறுத்து விடுவாளா?

சிந்தனைச் சிக்கலில் சுழன்று கொண்டிருந்த நான், கௌசல்யாவின் குரலினால் விழிப்படைந்தேன்.

"அக்கா! உங்கள் உள்ளத்தில் இடம் பெற்றிருக்கும் அவரே என் இதயத்திலும் வீற்றிருக்கிறார். அவரது இதயக் கோவிலில் இருவருக்கு இடம் உண்டு அக்கா. நீங்கள் என் சகோதரியாக— என் கணவருக்கு மனைவியாக இருந்து விடுங்கள் அக்கா...."

என் கௌசல்யா தான் பேசுகிறாளா? மனைவி இருந்தும் மறுமணம் புரிவதை — சட்டம் தண்டிப்பதை — அவளே வலுவாக ஆதரிக்கிறாளா? முழு மனத்துடன் ஹேமாவுக்கு இடமளிக்கிறாளா?

"நான் மனிதனாக வாழ்வது உனக்குப் பிடிக்கவில்லையா கௌசி...."

"என்ன சொல்கிறீர்கள் அத்தான்..." மன்னிப்புக் கேட்கும் தொனியில் புரிந்தும் புரியாமல் பொதிந்து நின்றதைப் புரிய வைக்க வேண்டினாள் கௌசல்யா.

"ஹேமாவைக் கல்யாணம்செய்துகொள்ள முடியாமற் போய் விட்டபின், ஏக்கம் பிடித்துவிடும் என் ஆண் மனத்துக்கு அன்பால் அணையிட நீ வந்து சேர்ந்தாய். என்னை ஆயுள் முழுவதும் உன்னுடையவனாகவே ஏற்றுக் கொள்ளாமல் உன் அன்பைப் பகிர்ந்தளிக்கிறாயே. என் இதயத்தை இரு கூறாக்குகிறாயே கௌசி.... உன்னைக் கைப்பிடித்த பிறகு எனக்கு ஹேமாவைப் பற்றிய நினைவு துளிக்கூடக் கிடையாது. இருந்திருந்தால், இத்தனை நாட்கள் நான் மனிதனாகவே வாழ்ந்திருக்க முடியாது..."

செயலற்று நின்றிருந்த கௌசல்யாவைத் தாங்கிப் பிடித்துக் கொண்டாள் ஹேமா. என் வார்த்தைப் புயல்.....இதயத்தின் அடித்தளத்திலே பிறந்த எண்ணக் குமுறல் ஓய்ந்த பின்னர் அமைதியாகப் பேசினாள் ஹேமா.

"உங்களைப் பற்றிய நினைவில் கன்னியாகக் காலம் கழிக்கும் என்னைப் போலவே நீங்களும் என் நினைவில் மணமாகாதவராக இருப்பீர்கள். என்றாவது உங்களைக் காணலாம் என்று எண்ணி வந்தேன். உங்களை அடையலாம் என்ற நம்பிக்கையில் வந்தேன். ஆனால் எனக்கு முன் அந்தப் பாக்கியத்தைப் பெற்று விட்டாள் கௌசல்யா. உங்கள் ஆனந்த வாழ்வில் புயல் எழுப்ப நான் இங்கு இருக்க மாட்டேன்."

"அவருக்கு மனைவியாக இல்லாவிட்டாலும் அன்புத் தங்கையாகவாவது நீங்கள் இங்கேயே இருந்தால்தான் என் மனம் அமைதி பெறும்." தேம்பினாள் கௌசல்யா.

"நேரத்துக்கு நேரம் என் மனத்தை மாற்றிக் கொள்வதென்றால் நான் என்றோ மணமானவளாகி இருக்க வேண்டும். அத்தானை என் அன்புத் தெய்வமாக வைத்துப் பூஜிக்கிறேன். என் உள்ளத்தில் அரிய இடம் கொடுத்திருக்கிறேன். அவரை எப்படி என் அண்ணனாக ஏற்றுக் கொள்ள முடியும்? உறவை மாற்றினாலும் உணர்வை மாற்றிக் கொள்வது என்றால் இயலாத காரியம் சகோதரி...... ஒரு விஷயம் மட்டும் கூறுகிறேன். நான் வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ளவும் மாட்டேன். உங்கள் இன்ப வாழ்வுக்கு இடையூறாக இருக்கவும் மாட்டேன். இனி என் வாழ்வை உங்களுடன் பிணைக்க நினைக்கவே மாட்டேன். அத்தான்! நாம் காதலர்களாக இருந்தபோது எழுப்பிய இன்பக் கோட்டைகளை இனிய கனவுகளை எண்ணிக் களைத்து என் வாழ்வைக் கழிப்பேன். உடலில் அல்லாமல் உள்ளத்தால் மட்டுமே நாம் ஒன்றி வாழ்ந்துவிட்ட நாட்களை நினைத்து நினைத்து அந்த நினைவின் நிறைவில் ஆனந்தமாகவாழ்வேன். நான் வருகிறேன் அத்தான். வருகிறேன் சகோதரி....."

ஹேமா போய் விட்டாள். முதல் தடவை என்னைப் பிரிந்த போது சலனத்தை மூட்டி விட்டுச் சென்றாள். இப்போது பிரியும்போது சாந்தியை ஏற்படுத்தி விட்டுப் போகிறாள்.

கௌசல்யாவின் கண்களில் நீர் வழிந்தது. என் இதயத்துள் ஆர்ப்பாட்டங்களெல்லாம் ஆய்ந்து ஓய்ந்து அமைதி கொண்டுவிட்டது. விழிகளில் முட்டி நின்ற நீர் கன்னங்களின் வழியாக உருண்டு வழிந்தது. நான் கௌசல்யாவைப் பார்த்தேன். அவள் என்னைப் பார்த்தாள். கோவைக் [illegible] என் மார்பில் சாய்ந்தாள். இனி எந்தச் சக்தியும் எங்களைப் பிரிக்காது என்பதை வலியுறுத்துவது போல், அவள் கரமும் என் கரமும் இணைந்திருந்தன.

தூரத்தே போகும் ஹேமாவை அழைக்க 'அக்கா' என மெல்லக் கௌசல்யாவின் உதடு பிரிந்தது.

"இது வரை என்னுடன் சேர்ந்து விடலாம் என ஓட்ட ஓட்ட வந்திருந்தாலும், இனி அவள் பாதை வேறானது. நம் பாதை வேறானது. நம் பாதையில் இன்னும் இணைந்து பிரிந்து செல்ல வேறு எத்தனையோ உண்டு. அவளை அழைக்காதே...." என்றேன்.

என் குரலில் ஏன் இத்தனை கண்டிப்பு? ஏன் இத்தனை உறுதி?

மூன்று ஆண்டுகளுக்கு முன், ஹேமாவைப் பற்றிய நினைவிலேயே மூழ்கி வாழ்ந்த நான் தான் இப்படிப் பேசினேனா?

ஆம்.... அன்று அவள் இல்லாமல் நான் இல்லை என்ற எண்ணத்தை இதயத்தில் கொண்டிருந்தேன். இன்று என்னை நம்பி வந்து, எனக்கே தன்னை அர்ப்பணித்துவிட்ட கௌசல்யாவுக்காக நான் கல்யாணமானவனாக, கண்ணியமானவனாக, மனிதனாகத்தானே வாழ வேண்டும்?

# ஈறு உபாதை மற்றும் பற்சிதைவிலிருந்து குணமடைந்ததைப்பற்றிய

# வியக்கத்தக்க செய்திகள்

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட அத்தாட்சிக் கடிதங்கள்

## போர்ஹான்ஸ்

பற்பசையின் பிரத்தியேகமான மதிப்பை நிரூபிக்கின்றன.

"எனக்கு இப்போது 55 வயதாகிறது.

என்னுடைய எல்லாப் பற்களும் சீராகவே இருக்கின்றன. ஆனால் 1943-ல் என்னுடைய இரண்டு பல்வரிசைகளிலும் உள்ள முன்புற மற்றும் பக்கவாட்டிலுமுள்ள பற்கள் அசையத் தொடங்கின. அவை விழுந்துவிடுமென்றே நான் நினைத்தேன். 1943-ல் ஒரு நாள் போர்ஹான்ஸைப்பற்றிய குறிப்புகளைக் கண்டேன். நான் அதை உபயோகிக்கத் தொடங்கினேன். இப்போது போர்ஹான்ஸ் என் பற்களைக் காப்பதுடன் அவற்றை உறுதியுள்ளதாகவும் செய்திருக்கிறதென்பதைக் கூற மகிழ்கிறேன்."

---

"நான் எப்பொழுதும் போர்ஹான்ஸையே குறிக்கிறேன்.

பற்கள் அல்லது ஈறுகளிலுள்ள கோளாறுகளுக்காக என்னிடம் சிகிச்சைபெறுபவர்களும் எப்பொழுதும் அதற்காக நன்றி கூறுகிறார்கள். சிகிச்சை பெறும் குழந்தைகளைக்கூட போர்ஹான்ஸ் உபயோகிக்கும்படி நான் சிபார்சு செய்கிறேன். மேலும் என்னுடைய ஆஸ்பத்திரிக்கு வருபவர்களில் பலர் அவர்களின் குழந்தைகளுக்கும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள்."

---

"நான் மிகச் சிறந்த பலனை அடைந்திருக்கிறேன்.

போர்ஹான்ஸ் உபயோகிப்பதால், என் தகப்பனார் மூலம் நான், போர்ஹான்ஸ் ஈறுகளுக்குப் பலனளிக்கக் கூடியது என்று கேட்டிருக்கிறேன். ஆதலால், எனக்கு ஈறுகளில் உபாதை ஏற்பட்டவுடன், என் தந்தையின் புத்தி மதிப்படி போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கினேன். அன்றிலிருந்து இன்றுவரை போர்ஹான்ஸையே உபயோகித்து வருகிறேன்."

**போர்ஹான்ஸ்**
ஒரு
பல் வைத்தியரால்
உருவாக்கப்பட்ட
பற்பசை




GEOFFREY MANNERS & CO., LIMITED







VACULAX
RELIEVES CONSTIPATION
VACULAX
RELIEVES CONSTIPATION

# புதுவெள்ளம்

### அத்தியாயம் இருபத்தேழு

## இருவகை ஆசைகள்

**சா**லையில் தோட்ட வேலை செய்வதைத் தினசரிப் பழக்கமாக வைத்துக் கொண்டான் முருகையன். செடிகொடிகளுக்கு மத்தியில், சிட்டுக் குருவிகள் பறக்கும் இடத்தில் காலை இளம் வெயிலில் கழியும் நேரம் அவனுக்கு இன்பமயமான பொழுதாக இருந்தது. வளரும் செடிகளைப் போல், மலரும் மலர்களைப் போல் சிறகடிக்கும் வண்ணத்துப் பூச்சிகளைப் போல் நாளுக்கு நாள் அவன் உள்ளத்தில் உற்சாகம் பொங்கியது.

சின்னஞ் சிறு செடிகளுக்குள் மலர் மொட்டுக்களாகிய இன்ப ரகசியத்தை இறைவன் எங்கே எப்படி மறைத்து வைத்திருக்கிறான்? அவற்றின் அழகையும் மணத்தையும் அவன் எங்ஙனம் பதுக்கி வைத்திருக்கிறான்? ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புத்தெழில் அல்லவா இயற்கையிடம் தோன்றிக் கொண்டிருக்கிறது!

சித்திராவுக்கும் அவனோடு தோட்டத்துக்கு வராமல் இருக்க முடியவில்லை. மலர்களுக்காக அவள் வரவில்லையென்றாலும் மனிதனுக்காக வந்தாள். அவனை மகிழ்விக்கும் பொருட்டுத் தனக்கும் அந்தச் செடிகொடிகளிடம் அக்கறை இருப்பதுபோல் காட்டிக் கொண்டாள். சித்திராவின் வரவு முருகையனிடம்



ஆனந்தமயமான கற்பனைகளைக் கிளறி விட்டது.

பெரியபாளையத்தில் அவன் சிறுவனாக இருந்தபோது தோட்டத்தில் வேலை செய்திருக்கிறான். ஆனால் அப்போதெல்லாம் இந்த அளவுக்கு அவன் குதூகலம் அடைந்ததில்லை. இப்போதோ அவன் அழகில் மயங்கும் பருவத்தில் இருந்தான்; அழகின் அருகிலேயே இருந்தான். இயற்கையிடம் பொதிந்து கிடக்கும் ஆக்க சக்தியைத் தூண்டி விட்டால் அது எப்படியெல்லாம் வளர்ந்து ஆனந்தத்தை வெளிப்படுத்திச் சிரிக்கிறது! சித்திராவிடம் அவன் மலர்களைச் சுட்டிக் காட்டிப் பேசுவான். தளிர்களைக் காண்பித்துச் சிரிப்பான். சித்திராவுக்கோ மலர்கள் முக்கியம் இல்லை. முருகையனின் முக பாவங்களை அந்த வேளைகளில் அவள் ரசிக்கத் தொடங்கி விடுவாள்.

அந்த வீட்டில் அவர்கள் போக்கில் மாணிக்கமும் தலையிடவில்லை; அவர் தாயாரும் தலையிடவில்லை; தாத்தா மட்டிலும் அவர்களுக்கு மத்தியில் ஓடும் பிள்ளையாக இருந்து அவர்களை உற்சாகப் படுத்திக் கொண்டிருந்தார். மாணிக்கத்தின் மனைவி தனலட்சுமிக்கு மட்டிலும்தான் முருகையனையும் சித்திராவையும் பிடிக்கவில்லை.

'இதென்ன பொழுது விடிந்ததும் விடியாததுமாய்த் தோட்டத்தில் கூத்தும் கும்மாளமுமாக இருக்கிறது? அந்தப் பட்டிக்காட்டுப் பிள்ளைக்குத்தான் புத்தி சரியில்லையென்றால், பட்டணத்தில் வளர்ந்த இவளுக்காவது புத்தி வேண்டாமோ? பெரியவர்களும் பராமுகமாக நடந்து கொள்கிறார்கள். என்னைக் கட்டிக் கொண்டு வந்தவருக்கோ கடையைப் பற்றியும் வியாபாரத்தைப் பற்றியும்தான் கவலை. ஒரு வார்த்தை கண்டித்துச் சொல்லி வைத்தால் என்ன வந்து விடுமாம்!'

தனலட்சுமியைக் குற்றம் சொல்லவும் முடியாது. அவள் கல்யாணம் செய்து கொண்டு அந்த வீட்டுக்கு வந்து பல வருடங்கள் ஆகிவிட்டன. ஆனால் மாணிக்கமும் அவளும் ஒரு நாள்கூட முருகையனையும் சித்திராவையும் போல் பேசிச் சிரித்துக் கொண்டதில்லை, வெகு நாட்களாகத்தான் அங்கே தோட்டம் இருக்கிறது. இருந்தும் என்ன செய்வது? ஒரு நாளாவது அவர் அங்கே உலாவிய இல்லை; மனைவியுடன் உட்கார்ந்து பேசியதுமில்லை.

அவர்களுடைய இல்லற வாழ்க்கை இயந்திர வாழ்க்கையாகவே கழிந்து கொண்டிருந்தது. மனைவியிடம் பேசும்போதுகூட ஆயிரத்தைப் பற்றியும் லட்சத்தைப் பற்றியுமே பேசினார். பேச்சில் பணத்தின் மணம் மட்டுமே கமழ்ந்தது; செய்கையில் இயந்திரத்தன்மை இருந்தது. ஒன்று, அவர்



வியாபாரியாக இருந்தார்; அல்லது இயந்திரமாக இருந்தார். கணவராக இருந்து மனைவியின் ஆசாபாசங்களை அறிந்துகொள்வதில் அவர் அக்கறையே செலுத்தவில்லை.

சித்திராவிடம் அவளுக்குப் பொறாமை ஏற்பட்டதில் என்ன வியப்பு? முருகையாவையும் வெறுத்து ஒதுக்குவதற்கு இதுவே காரணம். அவர்களை ஒன்றாகக் கண்டபோதெல்லாம் அவள் பெருமூச்சு விட்டாள். மனம் புழுங்கினாள். அவளுடைய மனக்குறைகள் அவர்களால் அவளிடம் வளரத் தொடங்கின. 'ஹூம்! கல்யாணம் நடப்பதற்கு முன்பே இப்படி யெல்லாம் கூத்தடித்தால், பிறகு இந்த வீடு எப்படித்தான் இருக்குமோ!'

முருகையாவின் இரவுப் பொழுதுகள் பெரும்பாலும் படிப்பதில் கழிந்தன. உறக்கம் வரும் வரையில் ஏதாவது ஒரு நல்ல நூலைப் படித்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகுதான் படுக்கைக்குச் செல்வான். இன்றைய மனிதர்களைப் பற்றிய கதைகள், கட்டுரைகள், வாழ்க்கைச் சரித்திரங்கள் இவை அவனை மிகவும் கவர்ந்தன.



அவன் படித்த புத்தகம் ஒன்று அவனுடைய சிந்தனைக்கு மிகவும் வேலையைக் கொடுத்தது. சாதாரணத் தொழிலாளியாக இருந்து, நாட்டின் தொழிற்புரட்சிக்கே காரணமாக இருந்த ஒரு மேல் நாட்டு மனிதரின் வாழ்க்கைச் சரித்திரம் அது. தனி மனிதனின் உயர்ந்த சாதனைக்கு அவர் வாழ்க்கை ஒரு வழிகாட்டியாக இருந்தது.

முருகையன் அன்றைக்கு இரவில் திரும்பத் திரும்ப அந்த மனிதரையே நினைத்துக் கொண்டான். வாழ்க்கை இப்போது அவனை வியாபாரியாகவும் கணக்கு எழுதுபவனாகவும் மாற்றியிருந்தது. கணக்கு எழுதுவதில் திரும்பத் திரும்பப் பணத்தைக் கூட்டுவதுமே பெருக்குவதுமே அவனுடைய வேலைகள். பெயரளவில்தான் அவன் வியாபார முதலாளியே தவிர, அதையெல்லாம் மாணிக்கத்தின் ஆட்கள் கவனித்துக் கொண்டிருந்தார்கள். பணத்தைக்கூட அவன் எழுத்தில்தான் காண முடிந்தது.

மறு நாள் ஞாயிற்றுக் கிழமையாதலால் அவனுக்குக் கம்பெனி அலுவல்கள் இல்லை. மாணிக்கமும் பம்பாய்க்குப் போயிருந்தார். முற்பகலில் அந்தப் புத்தகமும் கையுமாக உட்கார்ந்திருந்தான் முருகையன். சித்திரா மெதுவாக அறைக்கு வந்து எட்டிப் பார்த்தாள். பிறகு அருகில் வந்து உட்கார்ந்தாள்.

''இந்தப் புத்தகத்தை நீ அவசியம் படித்துப் பார்க்க வேண்டும், சித்திரா!'' என்று அவளிடம் கொடுத்தான் முருகையன்.

''இதில் என்ன அவ்வளவு பெரிய விஷயம் இருக்கிறது?''

''ஒரு பெரிய மனிதரின் வாழ்க்கை இருக்கிறது. சாதாரணத் தொழிலாளியாக வாழ்க்கையைத் தொடங்கிய ஒருவர் அந்த நாட்டில் ஒரு பெரிய தொழிற்புரட்சியையே ஏற்படுத்தி விட்டார். பல்லாயிரக்கணக்கானவர்கள் உழைக்கும் ஒரு பெரிய ஸ்தாபனத்தையும் உருவாக்கி, அந்தத் தொழிலால் நாட்டின்வளத்தை உயர்த்திவிட்டார்.''

''அழகான காதல் கதையைக் கொடுத்துப் படிக்கச் சொல்கிறீர்கள் என்று நினைத்தேன். நீங்கள் வந்து...''

''இதுவும் ஒரு காதல் கதைதான், சித்திரா: அவரும் காதலித்துத்தான் கல்யாணம் செய்து கொள்கிறார். தொழில் துறையில் அவர் வெற்றி பெருகப் பெருகக் குடும்பத்தில் அவருக்கு உள்ள ஈடுபாடும் பெருகிக் கொண்டே போகிறது. அவர் வீட்டையும் மறக்கவில்லை; நாட்டையும் மறக்கவில்லை. அவருடைய குடும்ப வாழ்க்கையைப் படிக்கும்போது அற்புதமான காதல் கதையையும் மிஞ்சி விடும் போல் இருக்கிறது.''

''அப்படியானால் கட்டாயம் படிக்க வேண்டியதுதான்'' என்று சொல்லி விட்டுச் சிரித்தாள் சித்திரா.

அந்தச் சிரிப்பால் உற்சாகம் பெற்ற முருகையன் அவளிடம் தன் ஆவல் ஒன்றை வெளியிட்டான்.

''நான் சிறையிலிருந்து வெளிவந்தவுடன் கிராமத்தில் இருந்து கொண்டு புதிய முறையில் விவசாயத்தைக் கவனிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அந்த ஆசைதான் நிறைவேறாமல் போய் விட்டது. இப்பொழுது எனக்கு மற்றொரு ஆவல் ஏற்பட்டிருக்கிறது.....''

சித்திரா அவன் முகத்தை ஆவலுடன் உற்றுப் பார்த்தாள்.

''நம்முடைய கல்யாணத்துக்குப் பிறகு நன்றாக யோசனைசெய்துகொண்டு, ஏதாவது ஒரு தொழிற்சாலையைத் தொடங்க வேண்டும் என்று நினைக்கிறேன். உழவும் தொழிலும் சேர்ந்து வளர்ந்தால்தான் நாட்டுக்கு நல்லது.''

''ஓ! கோடீசுவரராக வேண்டும் என்று திட்டம் போடுகிறீர்கள் போலிருக்கிறது!''

''இல்லை, சித்திரா! பணத்துக்காகச் சொல்லவில்லை. கோடிக்கணக்கான மனிதர்களின் அன்பு கிடைக்குமென்றால் அது விலை மதிக்க முடியாத சொத்தாகி விடுமல்லவா? சுயநலத்தால் பணம் திரட்டுகிறவர்களுக்கு எதிர்காலத்தில் இந்த நாட்டில் மதிப்பு இருக்காது; பலருக்கு உழைப்பும் பிழைப்பும் கொடுக்க வேண்டும். பலரை நன்றாக வாழ வைத்து நாமும் வாழ வேண்டும்.''

சித்திராவின் முகத்தில் இப்போது பரிகாசம் தெரிந்தது. ''நல்ல அத்தான் நீங்கள்! இப்போது உங்களுக்கு இங்கே என்ன குறைந்து விட்டதாம்?''

''ஒரு குறையும் நமக்கு இல்லைதான். ஆனால் குறைகள் நிறைந்த பெருங் கூட்டத்துக்கு மத்தியில் நாம் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அவர்களுடைய குறைகளைக் குறைக்காவிட்டால் நாமும் இனி அமைதியாக வாழ முடியாது.''

''நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?''

''இதைப் படித்துப் பார், விளங்கும். வாழ்க்கையை முன்னேற்றி வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்று விரும்புகிறேன். என்னுடைய ஒரே சொத்து நீ. உன் துணை எனக்கிருந்தால் நம்முடைய எதிர்கால வாழ்க்கையை நாம் மிகச் சிறந்ததாகச் செய்ய முடியும்.''

''என் துணை எப்போதும் உங்களுக்கு உண்டு, அத்தான்!'' என்று குழந்தையைப் போல் கூறினாள் அவள். ''ஆனால் நீங்களும் எப்போதும் என்னருகிலேயே எனக்குத் துணையாக இருக்க வேண்டும். இப்போது நீங்கள் போய்க் கணக்கு எழுதுவதுகூட எனக்குப் பிடிக்க வில்லை.''

''கணக்கை வேறு யார் எழுதுவதாம்....?''

''காசை வீசியெறிந்தால் எத்தனையோ கணக்கப் பிள்ளைகள்!''

அவளுடைய அறியாமையை எண்ணித் தனக்குள் நகைத்துக் கொண்டான் முருகையன்.

''சித்திரா! நம்முடைய வேலைகளை முடிந்தவரையில் நாம்தான் பார்க்க வேண்டும். நமக்காக மற்றொருவரைச் சாப்பிடச் சொல்கிறோமா? நம்முடைய உடலுக்கும் உள்ளத்துக்கும் அறிவுக்கும் பிறகு என்னதான் வேலை இருக்கும்? சோம்பலுக்கும் சுகபோகத்துக்கும் மட்டிலுமா நாம் பிறந்திருக்கிறோம்?''

''சரி! உங்கள் இஷ்டப்படியே ஒரு தொழிற்சாலையை வைத்து விடுவோம். பலருக்கு வேலையும் கொடுப்போம். ஆனால் நீங்கள் மட்டிலும் என்னோடு வீட்டில்தான் இருக்க வேண்டும்!''

''வீட்டில் இருக்க வேண்டிய நேரத்தில் வீடு; தொழிலைக் கவனிக்கும் நேரத்தில் தொழில்.''

''ஊஹூம்! அதுதான் முடியாது!'' என்று பிணங்கினாள் சித்திரா. ''உங்களுடைய ஒரே தொழில்.... எனக்குப் பக்கத்தில் இருப்பதுதான்!'' இப்படிச் சொல்லிவிட்டு நாணத்தால் முகம் புதைத்துக் கொண்டாள் சித்திரா. முருகையன் திகைத்தான்.

### அத்தியாயம் இருபத்தெட்டு

# உணவும் வீடும்

சித்திராவின் வீட்டுக்கு மாதச் சாமான்கள் மளிகையிலிருந்து வந்திருந்தன. அவற்றை வேலைக்காரிகள் இருவர் புடைத்துச் சுத்தம் செய்து கொண்டிருந்தனர். வெகு நேரமாக அந்த வேலை நடந்து கொண்டிருந்தது. எதேச்சையாகக் கூடத்தின் பக்கம் சென்ற முருகையன் அந்தக் காட்சியைக் கண்டு விட்டுச் சற்று நேரம் அங்கு நின்று வேடிக்கை பார்த்தான்.

அந்த வீட்டில் சித்திராவின் தாயார், அண்ணி, சித்திரா ஆக மூன்று பெண்கள் இருந்தார்கள். வேலைக்காரிகளின் எண்ணிக்கையோ அவர்களைவிட அதிகமாக இருந்தது. சித்திராவும் படிப்பை நிறுத்தி விட்டாள்; அண்ணிக்கும் குழந்தை குட்டிகள் கிடையாது; தாயாருக்காவது வயது அதிகம் என்று ஒரு காரணம் சொல்லலாம். 'இவர்களுக்கு எப்படித்தான் உண்ணும் உணவு ஜீரணமாகிறதோ?' என்ற வியப்பு ஏற்பட்டது முருகையனுக்கு.

அரிசிக் குவியலுக்குப் பக்கத்தில் சிறியதொரு குருணைக்குவியல் ஒன்றும், மற்றொரு சிறு குவியலும் இருந்தன. அடுத்தாற்போல் உளுந்து, கடலை, துவரை இவற்றைப் புடைத்துக் கொண்டிருந்தவர்களுக்கு அருகிலும் இவ்வாறே சின்னஞ் சிறு குவியல்கள் காணப்பட்டன. முருகையன் அவர்களுக்கு அருகில் சென்று அவற்றை உற்றுப் பார்த்தான். கையில் எடுத்துப் பார்த்தான்.

அரிசிக் குவியலுக்குப் பக்கத்தில் அரிசியைப் போலவே வெள்ளைக்கற்கள்! உளுந்துடன் உளுந்து நிறத்திலேயே களிமண் கட்டிகள்!

துவரம் பருப்போடு வேறு ஏதோ கலப்படப் பருப்பு, கேசரிப் பருப்பு!

முருகையனுடைய முகத்தில் வெளிப்பட்ட வியப்பு உணர்ச்சியைக் கண்ட வேலைக்காரி ஒருத்தி, ''என்ன ஐயா, இப்படிப் பார்க்கிறீங்க?'' என்றாள்.

''இல்லே....இதெல்லாம் வந்து...''

பட்டணத்து வேலைக்காரி வாய்ப் பேச்சிலும் கெட்டிக்காரி.

''கடவுள் இருக்காரே, அவரு இப்போது நெல்லுக்குள்ளே அரிசியைப் போலவே கல்லையும் சேர்த்து விளையச் செய்யுறாருங்க! காலம் கலி காலம் பாருங்க. கடவுள் இப்படியெல்லாம் விளையாட்டுக் காட்டுறார்.''

''எப்போதுமே இப்படித்தான் இருக்குமா...?''

''முதல்லே கொஞ்சமா இருந்துச்சுங்க. சண்டையும் வந்து, அப்புறம் சுதந்திரம் வந்திரிச்சுங்களா? இந்த மாதிரிக் கலப்பட வேலையை இப்போ ரொம்பச் சுதந்திரத்தோட செய்ய ஆரம்பிச்சுட்டாங்க!''

திடுக்கிட்டான் முருகையன். ஏதோ சிறிதளவு களத்தில் தானியங்களுடன் கல்லும் மண்ணும் கலந்து விடுவது இயற்கைதான். அதைக் கூடச் சுத்தப் படுத்தி விற்பனை செய்ய வேண்டியது தான் அவர்களுடைய கடமை.

ஆனால் அதையே ஒரு சாக்காக வைத்துக் கொண்டு இப்படிக் கூடவா மனிதர்கள் செய்வார்கள்? அரிசியில்

இயல்பாகவே கலந்து விடும் கல்லாக இருந்தால் அது எப்படி அரிசியைப் போலவே இருக்கும்? அந்த அந்தத் தானியங்களைப் போலவே நிறத்திலும் உருவத்திலும் இருக்கக் கூடிய பொருள்களாகத் தேடிப் பிடித்துக் கலப்பதென்றால் அவர்கள் எவ்வளவு கை தேர்ந்த திருடர்கள்? எவ்வளவு பயங்கரமான சமூக விரோதிகள்!

''இதெல்லாம் உங்களுக்கு அதிசயமாக இருக்குதாய்யா? இப்படியெல்லாம் அவுங்க செய்தாத்தானே எங்களைப் போல ஏழைபாழைகளுக்குப் பொழைப்பு நடக்கும்? இந்த நல்ல எண்ணத்தோடதான் அவுங்க செய்துக்கிட்டு வர்றாங்க!'' வேலைக்காரி இப்படிச் சொல்லி விட்டுக் குறும்புச் சிரிப்புச் சிரித்தாள்.

''உங்கள் வீடுகளிலும் நீங்கள் இப்படித்தான் சாமான்களைச் சுத்தப்படுத்திச் சமையல் செய்கிறீர்களா?''

''நாங்கள்ளாம் அன்றாடம் காசைப் பார்த்துக்கிட்டு, அடுப்பிலே உலையை வைக்கிறவங்க. எங்களுக்கு இதுக்கெல்லாம் நேரம் ஏது? ஏதோ கிடைக்கிறதை வாங்கிட்டுப் போய், அவசரம் அவசரமா உலையிலே கொட்டி, வெந்ததைச் சாப்பிட்டுக்கிட்டு வர்றோம். கல்லையும் மண்ணையும் சரிக்கச் செய்யறதுக் கேத்தாப்பிலே கடவுள் எங்களுக்கு உடம்பைப் படைச்சிருக்கார்!''

வேலைக்காரியுடன் முருகையன் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்து விட்டு, மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தாள் சித்திரா. முருகையன் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த கல்லிலும் மண்ணிலும் சிறிதளவு எடுத்துக் கொண்டு அவனுடைய அறைக்கு வந்தான். சித்திராவும் அங்கு வந்து சேர்ந்தாள்.

முருகையனுடைய முகத்தில் தெரிந்த குழப்பத்தையும், மேஜைமீது அவன் பரப்பி வைத்திருந்த சாமான்களையும் பார்த்த சித்திரா, ''இதெல்லாம் என்ன அத்தான்? ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''இந்தச் சாமான்கள் உணவோடு கலந்து வயிற்றுக்குள் போனால் என்ன ஆகும்...?''

''புதிய புதிய நோய்கள் உண்டாகும்; புதிய மருந்துகளைக் கண்டுபிடிப்பார்கள்; மருந்துக் கடைகளும் பெருகும்; அதிகமான ஆஸ்பத்திரிகள் கட்டுவார்கள். இன்னும் அதிகமான டாக்டர்களுக்குச் சுறு சுறுப்பாகத் தொழில் நடக்கும். நாட்டில் இப்போது உள்ள ஜனத்தொகையும் குறையும்!''

''ஆஸ்பத்திரிகளில் நோயாளிகளுக்குக் கொடுக்கும் உணவிலேயே கலப்படம் இருந்தால்?''

''அதுதான் சொன்னேனே, ஜனத் தொகை குறையும் என்று!'' சிறிது கூடக் கவலைப்படாதவள் போல் அலட்சியத்தோடு கூறினாள் சித்திரா.

''சித்திரா! எவ்வளவோ பணம் செலவு செய்து பெரிய பெரிய ஆஸ்பத்திரிகளைக் கட்டுகிறார்கள். மருந்துகளையும் வாங்கிக் குவிக்கிறார்கள். இரவு என்றும் பகல் என்றும் பாராமல் டாக்டர்கள் நோய்களுடன் கடுமையான போராட்டம் நடத்திக் கொண்டு வருகிறார்கள். இவ்வளவும் நடந்தும் என்ன பயன்? நோய்களை உற்பத்தி செய்யும் விஷப் பூச்சிகளும் இங்கே மனிதர்களாக வாழ முடிகிறதே, சித்திரா!''

''இந்தக் கவலையெல்லாம் உங்களுக்கு வேண்டாம் அத்தான்!'' என்று கொஞ்சலாகக் கூறினாள் சித்திரா. ''நம்முடைய வீட்டுச் சாப்பாடு முதல்தரமான சாப்பாடு. வைட்டமின் 'ஏ' முதல் 'இஸட்' வரையில் அதில் இருக்கும்படியாகத்தான் நம்முடைய உணவுத் திட்டத்தை வைத்துக் கொண்டிருக்கிறோம். நெய்யும் பாலும் நம்முடைய வீட்டில் உள்ள மாடுகளிடமிருந்து கிடைக்கின்றன. இன்னும்....''

''போதும் சித்திரா!'' என்று கோபமாய்க் கத்தினான் முருகையன். ''நம்முடைய வீட்டில் நாம் கவனமாய்த்தான் இருக்கிறோம். ஆனால் நாம் இப்படியெல்லாம் வாழ்வதற்கு நமக்கு யார் பணம் கொடுக்கிறார்களோ, அவர்களுக்குத்தான் துரோகம் செய்கிறோம். இவ்வளவு பொருள்களும் நம்முடைய கடைப் பொருள்கள் சித்திரா! நம்மிடம் காசு கொடுத்துச் சாமான் வாங்குகிறார்களே, அவர்களுடைய கண்களிலும் நாம் மண்ணைத் தூவுகிறோம்; வயிற்றிலும் கல்லைக் கொட்டுகிறோம். செல்லாக் காசுக்கு நாம் கடைச் சாமான்களைக் கொடுப்பதில்லையே?''

''அத்தான்! எதையும் புரிந்து கொள்ளாமல் பேசினால் எனக்குக் கோபம் வரும்'' என்று திருப்பிக் கத்தினாள் சித்திரா. ''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் நம்முடைய கடையில் மட்டும்தான் இதெல்லாம் நடக்கிறது என்று சொல்வீர்கள் போல் இருக்கிறதே! நமக்கு வேறு வினையே வேண்டாம்; நீங்களே போதும்.''

அவளுடைய கோபம் நியாயமான கோபம் என்று தோன்றியதால் மௌனம் சாதித்தான் முருகையன்.

''சாமான்களை வாங்கி விற்கும் நமக்கெல்லாம் இதுதானா வேலை? ஆயிரமாயிரம் பேர்கள் இப்படி வியாபாரம் செய்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் இது தானா வேலை? எங்கேயோ பெரிய பெரிய இடங்களில் ஒரு பத்துப் பேரோ, இரு

பது பேரோ இப்படிச் செய்கிறார்கள். மொத்தமாகச் சாமான்களை வாங்கி, இந்தப் பித்தலாட்டங்களைச் செய்து, அவர்கள் வெளியில் அனுப்புகிறார்கள். அவர்கள் கொடுப்பதைத்தானே மற்றவர்கள் வாங்க வேண்டும்? எய்தவன் இருக்க அம்பைப் போய் நொந்து கொள்ளுகிறீர்களே! இதெல்லாம் அண்ணாவின் காதில் விழுந்தால் அவர் எவ்வளவு வருத்தப்பட்டுக் கொள்ளுவார் தெரியுமா?''

''என்னை மன்னித்துக் கொள், சித்திரா!'' என்று நாத் தழுதழுக்கக் கூறினான் முருகையன். ''நமக்கு இதில் சம்பந்தமில்லை என்று தெரிந்தவுடன் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது. ஆனால் இந்தத் தீமை இருக்கிறதே இது பயங்கரமான, அருவருக்கத்தக்க, இழிவான தீமை! மனிதனுக்கு மனிதன் செய்யக் கூடிய பாவத்திலேயே மிகப் பெரிய பாவம் இது! இந்தப் பாவத்தைக் கண்டு கொண்டு தெய்வம் எப்படித்தான் பொறுத்திருக்கிறதோ தெரியவில்லை. தெய்வம் நின்று கேட்கும் என்பார்கள். அரசு அன்றே கேட்கும் என்பார்கள். அரசு இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறது?''

''எல்லாம் அது சட்டங்களைப் போட்டுக்கொண்டுதான் இருக்கிறது. சிலருக்குத் தண்டனையும் கிடைத்திருக்கிறது.''

ஒரு வகையில் இது ஆறுதலைத் தந்தது முருகையனுக்கு. என்றாலும் குற்றத்துக்கு உடந்தையாக மாணிக்கமும் இருப்பதுபோலவே அவனுக்குத் தோன்றியது.

''ஏன், உன்னுடைய அண்ணா மொத்தமாகச் சாமான்களை வாங்கும்போதே நாணயமுள்ளவர்களிடம் வாங்கினால் என்ன?''

''எல்லாம் உங்கள் பெரியப்பா குமரவேல்தான் எங்களுக்குக் கொடுக்கிறார். இன்னும் பல பேர்களுக்கு அவர்தான் மொத்த வியாபாரம். அவரைக் கேட்டால் இன்னும் யார் யாரையோ சொல்கிறார். ரிஷிமூலம் நதி மூலம் பார்க்கக் கூடாது என்பார்களே, அது போல் இந்தச் சரக்குகளின் தயாரிப்பு மூலங்களையெல்லாம் நாம் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா?''

குமரவேலின் பெயரைக் கேட்டவுடன் முருகையனால் அந்த அவமானத்தைத் தாங்க முடியவில்லை. பெரிய பாளையத்துப் பெரிய குடும்பங்களின் பெயரைக் கெடுப்பதற்கு இப்படியும் ஒரு மனிதர் பிறக்கத்தான் வேண்டுமா என்று அவன் ஏங்கினான்.

''அத்தான்! தொடர் சங்கிலிபோல் பலப் பல காரணங்கள் இதற்குப் பின்னால் இருக்கின்றன. அண்ணாவிடம் அடிக்கடி அவருடைய வியாபாரப் பேச்சுக்களைக் கேட்டிருக்கிறேன். உங்களுடைய பெரியப்பா மீதும் முழுக் குற்றம் சாட்ட முடியாது. உழவு செய்து பொருள்களை விளைவிப்பவர்கள் தங்களுக்கு அதிகப் பணம் வேண்டும் என்று கேட்டிருக்கிறார்களாம். அங்கேயும் அதிகப் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆனால், சாமான்களை வாங்கும் மனிதர்களுக்கோ அதிக விலை கொடுத்துச் சாமான்களை வாங்க முடியவில்லை. ஏழைகளை வைத்துத்தான் நாம் பிழைப்பு நடத்த வேண்டும். அதிக விலைக்கு வாங்கி, நமக்கு லாபமும் வைத்து, குறைந்த விலைக்குக் கொடுக்க வேண்டும் என்றால் வேறு எப்படிக் கொடுப்பது? அவர் பேசுவதும் நியாயமாகத்தானே இருக்கிறது?''

''விலை எங்கே குறைகிறது? விஷம் போல் ஏறிக் கொண்டுதானே இருக்கிறது?'' என்று கேட்டான் முருகையன். ''என்னுடைய பெரியப்பாவை உன்னை விட எனக்குத் தெரியும். அவர் இந்த இரண்டு காரணங்களையும் சாக்காக வைத்து இந்தக் கேவலமான தொழிலைத் துணிந்து செய்கிறார்.''

''அத்தான்! அவர் உங்களுடைய சொந்தப் பெரியப்பா, அத்தான்!''

''சொந்த வீட்டின் நெருப்பாக இருந்தால் அந்த வீட்டை எரிக்காமல் விட்டு விடுமா என்ன? அடங்கி அடுப்புக்குள் எரியும் வரையில்தான் அதற்கு ஆக்க சக்தி உண்டு. இப்போது அது ஒன்றும் அறியாத அப்பாவி மக்கள் பலருடைய ரத்தத்தில் விஷம் பாய்ச்சிக் கொண்டு வருகிறது. குமரவேலைப் போன்றவர்கள் இப்போது லட்சத்தில் ஒருவர்தான் இருப்பார்கள். அவர்களை இப்படியே விட்டுக் கொண்டு போனால் இன்னும் பலர் இவர்களைப் பின்பற்றுவார்கள். பிறகு இந்தச் சமுதாயமே நோய்பிடித்து அழுகிப் போன சமுதாயமாகி விடும். சமூகத்துக்குப் பணிந்து கொடுப்பதோ, அதைக் கண்டும் காணாதது போல் ஒதுங்கிக் கொள்வதோ, அதிர்ச்சி தரக் கூடிய பின் விளைவுகளை ஏற்படுத்தி விடும்.''

இந்தச் சமயத்தில் பரபரப்போடு தாத்தா அறைக்குள் நுழைந்தார். அவர் முகம் பயம் காட்டியது.

''யாரோ ஓர் அதிகாரி. உங்களைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறார், தம்பி! அவரைப் பார்த்தால் கோபமாய் வந்திருக்கிறார் போல் தெரிகிறது.''

சித்திரா கலவரமடைந்து, ''அண்ணாவும் இந்தச் சமயத்தில் ஊரில் இல்லையே!'' என்று கைகளைப் பிசைந்தாள்.

முருகையன் வந்தவரைச் சந்திப்பதற்காக அமைதியுடன் வெளியே வந்து சேர்ந்தான்.

(தொடரும்)

# பெற்ற பெருமாளின் பிள்ளை

முரளிக்குத் தலையும் புரியவில்லை; காலும் புரியவில்லை. இப்படி ஒரு புரியாத பரபரப்போடு போய்த் தெரிந்த நண்பர்களை அழைத்தான். தெரியாதவரையும் அழைத்தான். எல்லோரையும் மந்தை போல் சாய்த்துக் கொண்டு போய் 'ஹாப்பி கேப்'பில் விருந்து வைத்தான்.

அந்த விருந்தில் கலந்து கொண்டவர்களுக்கு அவ்வளவு உற்சாகம் இருக்கவில்லை. முரளி இப்படி விருந்து வைக்கும்படியான காரணம் தெரிந்தவரைக்கும் எதுவும் இல்லையென்று தெரிந்த நண்பர்கள் கவலைப்பட்டார்கள். 'வியாபாரம் இல்லாததால் ஹோட்டல் முதலாளியே தெருவுக்கு வந்து ஆட்களைப் பொறுக்கிக் கொண்டு வந்திருப்பாரோ? 'அப்படி இருக்குமேயானால், கண்டபடி தின்றதற்குக் காசைக் கீழே வைத்து விட்டுப் போ' என்று கேட்பாரோ எனத் தெரியாதவர்கள் கவலைப்பட்டார்கள்.

கவலைகள் பெருகப் பெருக அல்வா மலைகள் உடைப்பெடுத்துச் சிதறின. பாதாம்கீர் 1961-ம் வருஷத்திய காவேரியைப் போல வயிற்றுக்குள் சீறிப் பாய்ந்தது. 'வடை' என்ற பெயர் படைத்த மரத் துண்டுகள் சிதறின. காப்பி ஆறு கண்டபடி ஓடிற்று.

மற்றவர்கள் கண்டபடி தின்று கவலையைத் தீர்க்கும் மாபெரும் விருந்தை ஒழித்துக் கட்டிக் கொண்டிருந்த போது, வேணு மட்டும் அந்த விருந்தை அவ்வளவு தூரம் கபடமாக ஒழித்துக் கட்ட விரும்பவில்லை. ஏச்சுக்கு ஒரு பேச்சில்லாமல் மூக்குக்கு மூன்று கரண்டி வீதம் உள்ளே தள்ளுவதும் ஒரு விருந்தாமோ? 'போனால் வராது' என்ற சேமிப்பு ஞானத்துடன் இரண்டு கிளாஸ் பாதாம் கீரைக் குடித்து விட்டு, "டேய், முரளி! ஒப்புக் கொள்கிறோம், நாங்கள்



நினைப் பிரியர்கள் என்பதை. அதற்காக, 'எதற்காக விருந்து?' என்று சொல்லாமலே, எங்களை விருந்துக் காட்டில் மேய விடுவதா?'' என்று பாதாம் பருப்பு கமறிய ஏப்பத்துடன் சீறினான்.

குண்டு ராவ் 'அல்வாவே போதும்' என்று போன் செய்கிற மனசால் ஏறெட்டு அல்வாக் களை விழுங்கி விட்டு, அடுத்த 'அயிட்ட'த்துக்கு வயிற்றில் இடம் இல்லாததால் வெறுப்புடன் தலை நிமிர்ந்தான். ''முரளி! வேலுவின் குற்றச்சாட்டைப் பலமாக ஆமோதிக்கிறேன் நான். அழைப்பு அடிக்காமல், ஒரு தலைவர் இல்லாமல், கேவலம், ஒரு நாட்டியம் கூட இல்லாமல் திடீரென்று விருந்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறாயே, அப்படி என்னப்பா உனக்குத் தலை போகிற குஷி?'' என்றான்.

வெங்காய வடையுடன் மல்லுக்கு நின்று கொண்டிருந்த மாணிக்கம், வேர்வை ஒழுகத் தலை நிமிர்ந்தான். தரை மட்டத்திலிருந்து கிளம்பி விட்டிருந்த குண்டுராவின் பேச்சிலே ஒரு பட்டத்தையும் கட்டி வைத்தான் இவன். ''யாரோ ஒரு பைத்தியக்காரி இந்த முரளிப் பயலின் காதல் வலையில் விழுந்திருப்பாள். அந்த வெங்காயக் காதலின் வெற்றிவிழாவைக் கொண்டாட இப்படி நம்மையெல்லாம் விருந்து என்னும் பயங்கர ஆயுதத்தால் தாக்கிக் கொண்டிருக்கிறான்.''

''போடா முட்டாள்!'' என்று கடைசிச் சொட்டுக் காப்பியை வாயில் ஊற்றுவதாக நினைத்து 'ஸ்லாக்'கில் ஊற்றிக் கொண்டு வாயைத் திறந்தான் பீட்டர்:

''நம்மைப் போல் அவன் அவ்வளவு அதிர்ஷ்டம் கெட்டவனல்ல. போன வருஷமே அவனுக்குக் காதலி கிடைத்து விட்டாள். விருந்துக்குக் காரணம் அதைவிடப் பெரிதாக இருக்க வேண்டும். சிக்கிம் லாட்டரியில் சிக்கி இருக்குமோ முதல் பரிசு?''

நாகராஜன் நாகத்தைப் போல் சீறினான்: ''அப்படியெல்லாம் அதிர்ஷ்டத்தைக் குறுக்கு வழியில் வரவேற்கத் தெரியாத அப்பாவியடா முரளிப் பயல். நான் யூகித்து விட்டேன். அது ஒரு 'ட்ராஜடி' அதிர்ஷ்டமாக இருக்க வேண்டும். எப்படி என்று கேட்பீர்களோ என்னருமைத் தோழர்களே! முரளியின் அப்பாவுக்கு 'சீரியஸா'க இருக்கலாம். அவன் பணக்கார வீட்டுப் பிள்ளையல்லவா? அவர் போய் விட்டால் ஆஸ்திக்கு அதிபதியாகலாம். அப்படி யமனை நாடிப் போய்க் கொண்டிருக்கும் அப்பாவின் அற்பாயுளை நினைத்துச் சந்தோஷப்பட்டு, இந்த விருந்தை வைத்திருக்க வேண்டும்.''

முரளியின் பக்கத்து வீட்டு நண்பன் தமிழண்ணலுக்கு, நாகராஜனின் குருட்டு ஜோஸ்யத்தை வியந்து எப்படி வாய் பிளக்க முடியும்? வாய் பிளந்து கொண்டிருந்த அத்தனை விருந்தினர்களையும் ஒருமுறை பார்த்தான். ''ஏன் இப்படி உங்கள் அப்பாவே இறந்து போனது போல் வாயைப் பிளந்து கொண்டிருக்கிறீர்கள்? இந்த ஹோட்டல்காரர்கள் ஈக்களைச் செல்லக் குழந்தைகளாக வளர்த்திருக்கிறார்கள். உங்கள் திறந்த வாய்க்குள் இரண்டொரு ஈக்கள் நுழைந்து இறந்து விடுமானாலும் உங்களை ஹோட்டல்காரர் சும்மா விடமாட்டார்'' என்று அவன் சொன்னதும், பிளந்து கொண்டிருந்த அத்தனை வாய்களும் 'லபக்'கென்று மூடிக் கொண்டன. பிறகு தமிழண்ணல் தொடர்ந்தான்: ''உங்களுக்கு ஓர் உண்மையை நான் தவிர வேண்டும்: முரளியின் அப்பா காயகல்பம் சாப்பிட்டுப் பிறந்தவர். அவர் நினைத்தால் யமனையே சாப்பிட்டு விடுவார். அவர் இன்னும் நினைக்கவில்லை. அத



னுல்தான் யமன் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறான். முரளியின் விருந்துக்குக் காரணத்தை நான் சொல்லுகிறேன்: அவன் கதையையோ வரைதையோ எழுது வதாகச் சொல்லிக் கொண்டிருந்தான் அல்லவா? எந்தப் பிற்றல் பத்திரிகையாவது இவன் சமைத்த 'அமெச்சூர் இலக்கிய'த்தை, தன் அநுதாபத்துக்குரிய வாசகர்களுக்குப் பரிமாறியிருக்கும். நாமெல்லாம் அந்த அமெச் சூர் இலக்கியச் சமையலை ஒரு கை பார்க் காமல் தப்பித்துக் கொண்டதற்காக இப்படி விருந்து வைக்கப் பழி வாங்குகிறான் முரளி!''

தெரிந்தவர்களை பேசிக் கொண்டு போனுல் எப்படி? தெரியாதவர்கள் கட்சியின் சார் பாக ஒரு 'ஸ்டேண்டு பிளாட்பாரம்' பேசினுர்: ''காரணம் இல்லாமல் விருந்து வைப்பதைப் பற்றி எங்களுக்கு ஆட்சேபம் இல்லை. அந்த சமயத்தில் நின்றதற்குக் கொடுக்க எங்களிடம் காசும் இல்லை!''

அதுவரையில் அவரவர் இஷ்டப்படியே பேசவிட்ட முரளி, தொண்டையைச் செருமி விட்டுக்கொண்டு எழுந்தான்.

''பெரியவர் பேசப் போகிறார்! பேசாமல் இருங்கள்'' என்று மூக்கைப் பொத்திக் கொண்டான் பீட்டர். அது ஒரு வகைக் கல் லூரி ஹாஸ்யம்!

முரளி 'திருவாய்' திறந்தான்: ('ஸ்பீக் கரைப் போலப் பெரும் குரலில்' என்று கொள்க. சற்றுத் தூரத்தில் பலகாரம் சாப்பிட்டுக் கொண் டிருந்தவர்களுக்குப் பெரும் வேதனையாக இருந்ததால் 'கொல்க' என்று வேண்டுமானாலும் கொள்க.) ''நான் பரீட்சையில் பாஸாகாமல் போனது, என் அப்பா 'குளோஸ்' ஆனதைவிட, லாட்டரியில் பரிசு கிடைப்பதைவிட, கதை பிரசுரமானதை விட எனக்குக் கிடைத்த மாபெரும் வெற்றி யாகும். இந்த வெற்றி விழா விருந்தில் கலந்துகொண்ட தெரிந்தவர்களுக்கும், தெரி யாதவர்களுக்கும் என் நன்றி.''

தெரிந்தவர்கள் நெளிந்தார்கள். தெரியாத வர்கள் விழித்தார்கள். வேதனைப்பட வேண் டிய ஒரு விஷயத்துக்கு விருந்து வைத்து விழாக் கொண்டாட முரளிக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?

அப்போது நிஜமாகவே அகில இந்திய ரேடியோ 'சுகம் சங்கீத்'தைக் காது கொண்டு கேட்கும்படியாக ஒலிபரப்பி விட்டதா? கலப் படமில்லாத சிலையை எந்த ஓர் அட்டு வியா பாரியாவது விற்று விட்டாரா? 'இலக்கியப் பத்திரிகை' என்று தம்பட்டம் அடித்துக் கொள்ளும் பத்திரிகை, உண்மையிலேயே இலக்கியக் கதையைப் பிரசுரித்து விட்டதா? அன்றையத் தினசரிப் பத்திரிகை ரயில் விபத் தைப் பற்றி ஒரு செய்தி கூட இல்லாமல் வெளியாகி விட்டதா? 'நாய் ஜாக்கிரதை' என்று போர்டு தொங்கிய வீட்டில் உண்மையி லேயே நாலு கால் நாய் இருக்கிறதா? இந்த மகத்தான அதிர்ச்சிகளெல்லாம் ஒன்று திரண்டு அங்கே 'வாக்கிங் ஸ்டிக்'காக வந்தது. அந்த 'வாக்கிங் ஸ்டிக்' துணையோடு ஒரு மனிதரும் வந்தார். மனிதரா! சட்! எவ்வளவு மரியாதை கெட்டதனம்? ராவ் பகதூர் அவர், ராவ்பகதூர்! (பொன்மணிகள் படிக் கும்போது 'ராவ்'வை 'அம்மா'வாக்கிக்கொள் ளும்படியாக வேண்டப்படுகிறது!) முரளி யைப் பெற்றெடுத்த சிரஞ்சீவிச் செல்வர் ராவ்பகதூர்!

வந்தவர் இருந்தாரா? இல்லையே! கம்பைச் சுழற்றினார். கண்களை உருட்டினார். ஆவேசம் வந்தவர் போல ஆடினார்.

முரளி ஒரு சாணுக் குறுகி, ஒரு மூலையில் ஒதுங்கினான். தெரிந்தவர்கள், தெரியாத வர்கள் அத்தனை பேர்களும் பிளேட்டுகளை தொழுக்கிக் கொண்டு நாலா பக்கங்களிலும் தெறித்து ஓடினர். எங்கே தெறித்தால் என்ன? இறங்கிப் போக வேண்டிய வழியில் முரளியின் அப்பா பெத்த பெருமாள் அல் லவா நின்று கொண்டிருக்கிறார்?

பெத்தபெருமாள், பெற்ற பிள்ளையின் பக்கம் நெருங்கினார். ''டேய்!'' என்று உறுமி னார். சற்று நேரத்துக்கு முன் வெற்றி விழாக் கண்ட நெஞ்சம் வெடவெடத்தது.

''வாடா இங்கே!''

வந்தான் முரளி.

''பாஸாக வில்லை என்று பார்ட்டி விருந்தா வைத்தாய்? அதற்கு இந்தக் கழுதைகளை எங்கே பிடித்தாய்? உனக்குக் குழி தோண்டிய பயல் எங்கே? கொண்டா அவனே!'' என்று முன்னும் பின்னுமாகப் பார்த்து கம்பைச் சுழற்றினார்.

கொஞ்சம் வழியை விட்டு நகர்ந்தார் அல் லவா பெத்த பெருமாள்? 'கழுதைகள்' ஓட வழி கிடைத்து விட்டது. முரளியும் ஓடி யிருக்கலாம். ஆனாலும் அவன் ஓடி ஒளியும் வீட்டில்தானே அவரும் இருந்து தொலைக் கிறார்? புலிக் குகையிலேயே வாழும் தன் ஜாதி முயல் துரதிர்ஷ்டத்தை எண்ணி மூக்கைச் சிந்திக் கொண்டான் முரளி.

''டேய், பயலே! இது 'பப்ளிக் ப்ளேஸ்'! அதனால்தான் நீ இன்னும் அப்பளம் ஆகாமல் திருட்டு விழி விழித்துக் கொண்டிருக்கிறாய். வீட்டுக்கு வா. நான் உனக்கு விருந்து வைக் கிறேன்'' என்று கூறிவிட்டுக் கம்பைக் கட்டி னார். இவருக்குக் கம்பைக் கட்டினால்தான் நடையைக் கட்ட முடியும்.

அந்தக் காலத்து வெறும் பெருமாளுக் கும், வெங்காயத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. புதுப் பணக்காரர்களை உருவாக்கிய யுத்த காலம் என்னும் பொற்காலம் அது. ஒரு ராணுவ அதிகாரிக்கு ஒரு நல்ல நாய்க் குட்டியைப் பரிசளித்து, அவர் பிரியத்தைச் சம்பாதித்துக் கொண்டார் பெருமாள். அந்த அதிகாரி அவருக்குச் சில வழி முறைகளைச் சொல்லிக் கொடுத்து, இரண்டு ராணுவப் படை முகாமுக்கு 'காண்ட்ராக்ட்' வாங்கிக் கொடுத்தார். அதிர்ஷ்ட லட்சுமி அழுகிய வெங்காயத்தில் இருந்தாள். அவ்வளவுதான்! பணம் கொள்ளை கொள்ளையாகக் குவிந்தது. யுத்த நிதிக்கு ஒரு லட்சத்தை வாரிக் கொடுத் தார். வெள்ளைக்காரன் சும்மா விட்டுவிடு வானு? 'ராவ்பகதூர்' பட்டத்தைக் கட்டிக் கொடுத்தான். பிறகு வெறும் பெருமாள் பெத்த பெருமாள் ஆனார். ஊரிலே 'சங்கம், அது, இது' என்றெல்லாம் இல்லையா? பெத்த

பெருமாளுக்கு அவை பிரசாரப் பீரங்கி களாக முழங்கின.

அப்படிப்பட்ட ராவ்பகதூருக்குப் பரீட்சையில் 'கோட்' அடித்ததற்காக விருந்து வைக்கும் கோமாளிப் பிள்ளையா பிறக்க வேண்டும்? 'பிறந்ததுதான் பிறந்து விட்டான். பிழைத்துப் போகட்டும்' என்று விட்டுவிட அவர் தயாராக இல்லை. எனவேதான் ஒன்பது மணிக்கெல்லாம் படுக்கைக்குப் போகிறவர், பத்து மணியாகியும் உள் வாசல் நடையில் உலவிக் கொண்டிருந்தார்.

அப்பாவின் குறட்டை ஒலியை எதிர் பார்த்தே நேரம் கழித்து வீடு திரும்பிய முரளியின் நெஞ்சம் ஒரு கணம் வேலைநிறுத்தம் செய்தது. இனி தப்பிக்க வழியில்லை என்ற நிலையில் அசட்டுத் துணிவுடன் அப்பாவைப் பார்க்காதவன் போல் வேகமாக நடந்தான்.

'போகாதே, நில்' என்று சொல்லவில்லை தான் ராவ்பகதூர். ஒரு செருமல் செருமினரே, அது போதாதா? சொல்லித் தெரிய வேண்டியதில்லையே செருமல்களே

''துரைவாளுக்கு வீடு திரும்ப ஏன் இவ்வளவு நேரம்? விருந்தை எங்கேனும் தொடர்ந்து நடத்தினீர்களோ? முதல் விருந்தில் எனக்கு ஒருவன் குழி தோண்டினான். இந்த விருந்தில்? எனக்குச் சமாதி கட்டிய சண்டாளப் பயல் யார்?'' பெத்த பெருமாளுக்குத் தருத்தபடியே பெத்த மீசைதான். அது பெத்தப் பெத்தத் துடித்தது.

முரளி தோளுக்கு மீறி வளர்ந்து விட்ட பிள்ளைதான். ஆனால் தோளுக்குக் கீழே தானே நெஞ்சு இருக்கிறது? அந்த நெஞ்சு அப்பாவுக்குப் பயந்து கணத்துக்குக் கணம் அடித்துக் கொண்டிருந்தது.

''ஏன்டா, பேசாமல் இருக்கிறாய்? பதில் பேசாவிட்டால் கொன்றுவிடுவேன், கொன்று. நீ ஒரு ராவ்பகதூர் பிள்ளைதானே?''

''ஆமாம்.''

''நான் வெளியே மானத்தோடு தலை காட்ட வேண்டும் அல்லவா?''

''வேண்டும்.''

''அதனால் நான் உன்னைத் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லத்தானே வேண்டும்?''

''வேண்டும்.'' என்ன மடத்தனம்? ''வேண்டாம், வேண்டாம்!'' என்று அலறினான்.

''ஏன் வேண்டாம். நீ பரீட்சையில் கோட் அடித்ததற்கே நான் வெளியே தலைகாட்ட முடியாது. ஏதோ 'பாரத ரத்ன' பட்டம் கிடைத்த மாதிரி அதற்கென்று டீ பார்ட்டி வேறு வைத்துக் கொண்டாடி விட்டாயல்லவா? இனி இந்த ஊர் சிரிக்கும். அதை எந்தக் கண்ணால் பார்ப்பது?''

''எந்தக் கண்ணால் பார்ப்பது?''

''உன்னைக் கொன்று விட்டு உன் கண்ணைப் பிடுங்கி உலகத்தைப் பார்ப்பது என்று தீர் மானித்து விட்டேன்.''

இப்பொழுது தலைக்கு மேலே சாண் போக வில்லை; முழம் போக வில்லை. உயிரே போய்க் கொண்டிருக்கிறது. இனி பயம் ஒரு கேடா? துணிந்து விட்டான் 'பாக்தாத் வீர' முரளி. ''அப்பா! நீங்கள் என்னைக் கொல்ல விரும்பினால் அதைவிட ஓர் அதிர்ஷ்டம் எனக்குக் கிடைக்கப் போவதில்லை. ஆனால் உங்களுக்குக் கொள்ளி வைக்கப் பிள்ளை இல்லாமல் போய் விடுமே என்று நினைக்கும் பொழுதுதான் எனக்கு இதயம் வெடிக்கிறது.''

உண்மைதானே? ஆனால் அதை நேற்றுப் பிறந்த பயலிடம் அவர். 'ராவ் பகதூர் தன'த்தை விட்டு விட்டு ஒப்புக் கொண்டுவிட முடியுமா? என்றாலும் வேறொரு விதத்தில் ஒப்புக் கொண்டு விட்ட மாதிரிதான் இருந்தது அவர் பேச்சு. ''விருந்து வைத்தாய். அதை மறக்க முடியாவிட்டாலும் மன்னித்து விடுகிறேன். ஒரு வருஷத்துக்கு முந்தியே, நீ ஒரு பெண்ணைக் காதலித்ததாகச் சொன்னானே ஒரு பயல்! நீ எப்படி ஒரு பெண்ணைக் காதலிக்கலாம்?''

''ஒரு பெண்ணைக் காதலிக்காமல் ஓர் ஆட்டுக்குட்டியையா காதலிப்பான் ஓர் ஆடவன்? கண்ணைக் கேட்டீர்கள் பொறுத்தேன். உயிரைக் கேட்டீர்கள், பொறுத்தேன். இப்போது காதலைக் கேட்கிறீர்கள். பொறுக்க மாட்டேன், தந்தையே, பொறுக்க மாட்டேன்..''



''நானும் பொறுக்க மாட்டேன் மகனே, பொறுக்க மாட்டேன். வசனமா பேசுகிறாய் வசனம்? பொசுக்கித் தள்ளி விடுவேன். உனக்குப் பெண் பார்த்திருக்கிறேன். அக்டோபரில் கல்யாணம்.''

''அக்டோபரில் எனக்கா கல்யாணம்!''

''ஆம். நீ அக்டோபர் பரீட்சை எழுதி முடித்ததும் கல்யாணம்.''

''காதலித்தவளைக் கைவிட்டு வேறொருத்தியை மணப்பதா? கேட்டுக் கொள்ளுங்கள் அப்பா, இதை: என்னை 'அணடிமை' செய்தீர்கள். அடங்கிக் கிடந்தேன் நான். இப்பொழுது கொதித்தெழுந்து விட்டேன்...... கொடி உயர்த்தி விட்டேன். அக்டோபர் பரீட்சை எழுதமாட்டேன். கல்லூரியில்தான் தொடர்ந்து படிப்பேன். காதல்தான் செய்வேனே தவிரக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன். இவற்றுக்கெல்லாம் நீங்கள் சம்மதிக்காவிட்டால், இப்பொழுதே இந்த வீட்டை விட்டுக் கிளம்பிச் செல்லத் தயாராக இருக்கிறேன்!''

கோழை முரளி கொடி கட்டிப் போராட்டம் தொடங்கியதைக் கண்டு பாராட்ட

அவர் பெறாத பெருமான் அல்லவே! பெற்ற பெருமான் அல்லவா? பாகிஸ்தான் 'அயூப்பெருமா'னாகி ராணுவ ஆட்சிப் பிரகடனத்தை வெளியிட்டார்: "டேய், அயோக்கியப் பயல் மகனே! கழுதையாய் அடங்கிக் கிடந்தவன் காதல் செய்யத் தெரிந்த பிறகு கட்டபொம்மனாகப் பார்க்கிறாயா? உன் இஷ்டம் போல் வெளியேறி விடலாம் என்று நினைத்திருந்தாயானால், அந்த நினைப்பிலே ஒரு வண்டி மண்ணை அள்ளிக் கொட்டிக் கொள். நீ கல்லூரிக்குப் போகக் கூடாது. அக்டோபருக்குத்தான் போக வேண்டும். காதலை மறந்து விடு. நான் பார்த்து வைத்திருக்கிற பெண்ணுக்கு மணவாளனாகி விடு. இதற்கு நீ சம்மதிக்காவிட்டால் உன்னை இருட்டறையில் இழுத்துத் தள்ளி விடுவேன். அறைக்கு வெளியே ஆரோக்கியசாமி காவல் இருப்பான். நாளைக் காலையில் நானும் உன் அம்மாவும் செங்கற்பட்டு வரையிலும் போகிறோம். மாலையில் நாங்கள் திரும்பியவுடன் நீ உன் சம்மதத்தைத் தெரிவிக்க வேண்டும். இணங்காவிட்டால் அக்டோபரில் இல்லை; அடுத்த வாரத்திலேயே உனக்குக் கல்யாணம் நடக்கும்."

"காவலில் அடங்காது அப்பா, காதல்! வற்புறுத்தினால் கல்யாணம் நடக்காது."

"பேஷாய் நடக்கும்; பிரமாதமாய் நடக்கும். அடுத்த வாரமே கொட்டி மேளம் முழங்க நானும் உன் அம்மாவும் தாரை வார்க்கக் கல்யாணம் அமர்க்களமாய் நடக்கும்!"

"அமர்க்களத்துக்குத்தான் நீங்கள் தாரை வாங்கப் போகிறீர்கள்" என்று முரளி படுக்கையில் போய் விழுந்தான்.

மறு நாள் காலை பத்து மணி.

"முரளி!" என்று குயிலினம் கொண்டாடிய குரல் ஒன்று இசைத்தது.

படுக்கையில் குமைந்து கிடந்த முரளி, தலை தூக்கிப் பார்த்தான். அறை வாசலில் நின்று கொண்டிருந்தாள் பார்வதி. 'வா' என்பதற்கு அடையாளமாகக் கையைக் காட்டினான்.

"வாசலில் பழியாய் உட்கார்ந்திருந்த ஆரோக்கியசாமியிடம் அனுமதி பெற்று உள்ளே நுழைவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது" என்று அலுத்துச் சலித்துக் கொண்டே அறைக்குள் வந்த பார்வதி, படுக்கையின் ஓர் ஓரத்தில் உட்கார்ந்தாள். முரளியின் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டாள். "உடம்புக்கு என்ன?"

அவன் உதடு விரக்தியால் பிரிந்தது: "இனி உடம்பு இல்லை. அதனால் ஒன்றும் இல்லை."

"அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள். நான் இரண்டு இனிக்கும் செய்திகளுடன் வந்திருக்கிறேன்!" என்று முறுவலித்தாள்.

"என்ன? என்ன?"

"பரீட்சை சமயத்தில் நான் 'டைபாய்ட்' சுரத்தில் விழுந்து விட்டதால் எழுதவில்லை. நான் இல்லாமல் மேல்வகுப்புக்குப் போக உங்களுக்குப் பிடிக்க வில்லை. அதனால் நீங்கள் வேண்டுமென்றே பரீட்சையில் ஒழுங்காக எழுதவில்லை. என்னோடு நீங்கள் அடுத்த வருஷமும் தொடர்ந்து படிப்பதற்காக இப்படிச் செய்தீர்கள்...."

"ஆமாம். நான் பாஸாகாமல் போன சந்தோஷத்தில் நேற்று டீ பார்ட்டி வைத்தேன்!"

"இன்றைக்குக் காலை தினசரியை நீங்கள் பார்க்க வில்லையா? 'பாஸ்' ஆன நம்பர்கள்' என்ற வரிசையில் உங்கள் நம்பரும் வந்திருக்கிறது. வேண்டுமென்றே நீங்கள் தவறாக எழுத முயன்றும்கூட உங்களை அறியாமல் நன்றாக எழுதிவிட்டீர்கள்!"

"இரண்டாவது இனிக்கும் செய்தி?"

"நமக்கு அடுத்த வாரம் கல்யாணம். அக்டோபரில் வைத்துக் கொள்ளலாம் என்று நேற்றுத்தான் உங்கள் அப்பா, என் அப்பாவிடம் வந்து சொல்லிவிட்டுப் போனார். திடீரென்று இன்று காலையில் உங்கள் அப்பாவும், அம்மாவும் செங்கற்பட்டுக்குப் போகிற வழியில் எங்கள் வீட்டுக்கு வந்தார்கள். அடுத்த வாரமே கல்யாணத்தை வைத்துக் கொள்ள வேண்டிய நெருக்கடி ஏற்பட்டிருப்பதாகச் சொல்லி விட்டுப் போனார்கள். அந்த நெருக்கடியை வாழ்த்திக் கொண்டே, இனிக்கும் செய்தியை உங்களிடம் கூற ஓடோடி வந்திருக்கிறேன்."

"காதலை வெறுத்த என் அப்பா, என்னை உனக்குக் கல்யாணம் செய்து வைக்க எப்படிச் சம்மதித்தார்?"

"காரணம் என் அப்பா! நான் 'டைபாய்டி'ல் விழுந்து கிடந்த போது உங்கள் பெயரைச் சொல்லிப் பிதற்றினேனாம். விஷயம் புரியாமல் அப்பா திணறியபோது, விஷயம் தெரிந்த என் கல்லூரித் தோழிகள் விளக்கினார்களாம். என் நல் வாழ்வில் அக்கறை கொண்ட அப்பா, உங்களைப் பற்றி விசாரித்தாராம். நீங்கள் எங்களுக்கு ஒரு வகையில் தூரத்து உறவினராம். என் அப்பா உங்கள் அப்பாவிடம் இதை சொல்லிக் கொண்டு போனார். உங்கள் அம்மா வந்து என்னைப் பார்த்தார். திருப்தி ஏற்பட்டது; கல்யாணம் நடக்கப் போகிறது."

"நீ எனக்கு இதை யெல்லாம் முன்பே சொல்லவில்லையே?"

"எல்லாம் நான்கு நாட்களுக்குள் நடந்திருக்கின்றன. விடுமுறை காலத்தில் நான் உங்களை வந்து எங்கே பார்ப்பது? எப்படிச் சொல்வது?"

"சொல்லாததனால் ஓர் உயிர்....."

"உங்கள் உயிருக்கு என்ன!" என்று அலறி விட்டாள் பார்வதி.

"அப்பா என் காதலை வெறுத்தார். 'இன்னும் ஒரு வாரத்தில் உனக்குத் திருமணம் நிச்சயம்' என்று கண்டிப்பாகக் கூறி விட்டார். அவர் முடிவை மாற்ற ஆண்டவனே வந்தாலும் முடியாது. வெளியே நான் பறந்து போய் விடாதபடி அறைக் கதவைப் பூட்டிப் பலமான காவலும் வைத்துப் போய் விட்டார். இந்த நிலையில் நான் உயிரை விட இருந்தேன். அப்பொழுதுதான்...... ஆரோக்கியசாமி வந்து....." என்று கூறிக் கொண்டிருக்கும் போதே முரளியின் கண்கள் செருகின.

"ஐயோ!" என்று அலறிய பார்வதியின் கண்களின் எதிரில் திறந்து கிடந்த தேன் புட்டி நகைத்தது. ஆரோக்கியசாமி வந்து முரளியிடம் என்ன சொல்லியிருப்பான் என்பதை எண்ணிப் பார்த்த பார்வதி, பிறகு அழவில்லை. சிரித்தாள்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# எங்களுடைய 'பணம் பிறகு செலுத்துங்கள்' திட்டம் இன்னும் வசதியாக்கப் பட்டுள்ளது




எங்களது, திருத்தியமைக்கப்பட்ட, 'பணம் பிறகு செலுத்துங்கள்' திட்டத்தால் பலன் பெறுங்கள். முதலில் செலுத்த வேண்டிய பணம் முன்னைவிட சொற்பமாக்கப் பட்டுள்ளதோடு பாக்கியை வசதியாகச் சிறு தொகைகளாகச் செலுத்தக் கூடியவாறு காலவரையறை இன்னும் நீடிக்கப்பட்டுள்ளது! இப்பொழுதைய ஏற்பாட்டின்படி பிரயாணக் கட்டணத்தின் தொகையில் 15% உடனடியாகச் செலுத்தினல் போதும்—மீதியை, 20 மாதங்களில் சுலபமான தவணைகளில் செலுத்தலாம்! 'பஸ்ட் கிளாஸ்' 'எகானமி' வகுப்புகளுக்கு, எல்லா சர்விஸ்களிலும் இந்தச் சலுகை உண்டு!

எந்த டிராவல் ஏஜெண்டிடமிருந்தோ, பாங்க் ஆப் இந்தியாவிடமிருந்தோ அல்லது நேராக எங்களிடமிருந்தோ அதிக விபரம் பெறலாம்!

**ஏயர்-இந்தியா**

பி. ஓ. ஏ. ஸி. மற்றும் காண்டாஸின் ஒத்துழைப்புடன்

IWT/AII-2718

